# மங்கை

ஜூலை' 92

☆ 'ஆயிரங்காளி அம்மன்'
(அருள்வலம்)

☆ மணமகள் சிகை அலங்காரம்

☆ ஒரு மாணவியின் சாதனை
(கைப்பந்து விளையாட்டு)

☆ அன்னை கஸ்தூரிபா காந்தி

☆ வீட்டை அழகுபடுத்துங்கள்

☆ பொக்கே தொழிற்சாலை நடத்தும்
பெண் அதிபர்

மற்றும் வழக்கமான பகுதிகள் அனைத்தும்

விலை ரூ. 6/-

TA—F-1

# புதிய பாரீஸ் மில்க் பிஸ்கட் புதிர்












பாரீஸ்

மில்க் பிஸ்கட்டில் புதுமை..

இதில் ஏற்பட்டுள்ள மாற்றம் புதிய, கவர்ச்சியான

பாக்கெட் மட்டுமல்ல.. உள்ளே இருப்பதிலும் கூட!

மேலும் சத்து நிறைந்த, புதிய பாரீஸ் மில்க் பிஸ்கட் இப்போது

மேலும் மொறுமொறுவென்று, மேலும் புதுமையாக,

மேலும் சுவையாக!



## சந்தாதாரர்களுக்கு ஒரு வேண்டுகோள்

எங்களுக்கு அம்புலிமாமாவிற்கும் அதன் மற்ற மொழிப் பதிப்புகளான சந்தமாமாவிற்கும் ஆயிரக்கணக்கான சந்தாதாரர்கள் இருக்கிறார்கள். எனவே உறைகளின் மீது முகவரியைக் குறிப்பது போன்ற பணிகளை முந்தைய மாத முதல் வாரத்திற்குள்ளேயே செய்ய வேண்டியுள்ளது. ஆகையால் தாமதம் இல்லாமல் நீங்கள் உங்கள் பிரதிகளைப் பெற வேண்டும் என்றால் உங்களது முகவரியில் மாற்றம் ஏதாவது இருந்தால் உடனேயே எமக்குத் தெரிவிக்க வேண்டியது மிகமிக அவசியம். உங்களுக்குச் சிறந்த முறையில் பணியாற்ற உதவ வேண்டுகிறோம்.

**டால்டன் ஏஜன்சீஸ்,**
சந்தாதாரர் பிரிவு
சந்தமாமா பில்டிங்ஸ்
சென்னை-600 026






ஒன்று சேர்த்திடுங்கள்
மேகி ஜிக்-ஸா புதிர்

வானவீதியில் விர்ரிட்டுச் செல்லுங்கள்.
உங்கள் மேகி ஸ்கை
ப்ளேஸரில்!





கடல்-வானப்பயணத்தை
பூர்த்தி செய்வீர் மேகி ஏஸ்
அட்வென்ச்சரர் கேமில்!

திருடனைப் பிடியுங்கள் மேகி
ஹூ-டன்-இட் மிஸ்டிரி
விளையாட்டில்

# உல்லாசம் பெறுவீர், வியப்பூட்டும் துணிகர விளையாட்டுகளில்

இலவசப் பரிசுகள் - மேகி கிளப் உறுப்பினர்களுக்கு!

வஞ்சகமான எதிரிகளை சாதுரியமாக
முறியடியுங்கள். மேகி ரெய்டர்ஸ்
ஆஃப் தி ரெட் ஸ்டார்
விளையாட்டில்!



இலவசம்! மேகி "வேர்ல்ட் ஆஃப்
அனிமல்ஸ்" புதிர்! ஒவ்வொரு 2 இலவசப்
பரிசுகளுக்கும் உங்களுக்கு ஒரு மேகி "வேர்ல்ட் ஆஃப்
அனிமல்ஸ்" புதிர் இலவசமாகக் கிடைக்கும்.

**ஹல்லோ! மேகி கிளப்பில் சேருங்கள்: மேகியின்
துணிகர உலகிற்குள் செல்லுங்கள்.**

ஐந்து மேகி நாடுல்ஸ் காலி பேக்குகளிலிருந்து அதன் முன்-
பக்கத்தில் உள்ள இந்த [Maggi 2-minute logo] முத்திரையை வெட்டி எடுத்து
எங்களுக்கு அனுப்புங்கள் - உங்களுக்குப் பிடித்த இலவசப் பரிசைப்
பெற. ஆறு முதல் எட்டு வாரங்களுக்குள் மேகி கிளப்பில் இருந்து
குதூகலமளிக்கும் பரிசு உங்களுக்கு அனுப்பி வைக்கப்படும்.

மறவாதீர்! உங்களுக்கு விருப்பமானப் பரிசைக் குறிப்பிட்டு
எழுதும்போது, உங்கள் பெயர், முகவரி, பிறந்த தேதி
ஆகியவற்றையும் எழுதுங்கள். ஏற்கனவே நீங்கள் மேகி கிளப்
உறுப்பினராக இருந்தால், உறுப்பினர் எண்ணையும் எழுதுங்கள்.
இதுவரை உறுப்பினராக ஆகவில்லை என்றால் இப்போது
வருகிறது வாய்ப்பு! மேலே உள்ள விவரங்களை எழுதும்போது,
உறுப்பினராக விரும்புவதையும் தெரிவியுங்கள். இலவசப்
பரிசுடன், இலவச மேகி கிளப் உறுப்பினர் அட்டையையும்
உங்களுக்கு அனுப்புவோம்.



எங்கள் முகவரி :

**MAGGI CLUB**
P.O. Box 5788 New Delhi-110 055




மேலும் ஒரு சலுகை: இதுவரை மேகி போட்ட ஹுவுலைப் பெற்றுக்கொள்ளவில்லை என்றால், இப்போதே பெற்றுக் கொள்ளுங்கள்.

HTA 777




# அம்புலிமாமா

நிறுவனர்: 'சக்கரபாணி' நிர்வாக ஆசிரியர்: நாகி ரெட்டி

## குணம் உயர்த்தும் கல்வி

கோடை விடுமுறை முடிந்து கல்வி நிலையங்கள் திறந்துவிட்டன. மாணவர்கள் மேல் வகுப்புகளுக்குப் போய்த் தம் படிப்பைத் தொடங்குகிறார்கள். இந்நிலை யில் நாம் குணம் உயர்த்தும் கல்வி, 'தொழிலோடு இணைந்த கல்வி' என்றெல்லாம் பேசப்படுவதைக் கேட் கிறோம்.

நம் குணங்களை உயர்த்தி நம் அறிவை பலப்படுத்தி அதிகரித்து ஒருவனைத் தன் காலில் நிற்க வைக்கும் கல்வி முறையையே குணம் உயர்த்தும் கல்வி எனக் கூறு கிறோம். தொழிலோடு இணைந்த கல்வி முறையில் மாணவன் தன் வாழ்க்கையை நடத்த ஒரு தொழிலைத் தேர்ந்தெடுத்து அதைப் பயில்கிறான். அதைக் கொண்டு அவன் தான் வாழவும் சமுதாயத்தை வாழ வைக்கவும் முயல்கிறான்.

இந்த இரு கல்வி முறைகளின் வேறுபாடு ஒரு மயிரிழை தான். ஏனெனில் ஒருவன் தொழிலோடு இணைந்த கல்வி கற்றுத் தன் வாழ்க்கையை அமைத்துக் கொண்டா லும் அவனது நற்குணங்கள், உயர் பண்பு, அவன் பெற்ற அறிவு ஆகியவையே அவனது உயர்விற்கு அடி கோலுகின்றன. இவற்றால் அவன் சமுதாயத்தில் மதிப்பும் உயர் இடமும் பெறுகிறான். இதனால் அவன் தன் சமுதாயத்தின் நல்ல நண்பன் ஆவதோடு நாட்டின் உயர்விற்கு காரணமாகி நல்ல குடிமகன் எனப் பெயர் பெற்றும் விளங்குகிறான்.

மதிமுகம்: 91 ஜூலை 1992 புன்னகை: 1

தனிப்பிரதி: ரூ. 4-00 வருட சந்தா: ரூ. 48-00

C. NITRA

# இளமை துள்ளும் வண்ணங்கள்



பள்ளிக்குச் சென்றால் ஆனந்தம்
புதிய ஃபெவிக்ரில்
ஸ்டூடன்ட்ஸ் போஸ்ட்டர்
கலர்கள் இருந்தால் ஆனந்தம்
பேரானந்தம்!
வண்ணமோ வண்ணம்
அழகான வண்ணம்
பச்சைக் கிளிபோல்
பளிச்சிடும் வண்ணம்
கண்ணைப்பறிக்கும் சிகப்பு, நீலம்
பால்போல்
வெண்மை,
பனிபோல் மென்மை
இன்னும் என்ன யோசனே?!!
படங்களை உடனே கையில் எடுப்பீர்
புதிய ஃபெவிக்ரில்
ஸ்டூடன்ட்ஸ் போஸ்ட்டர் கலர்களை
தீட்டுவீர்! பரவசம் அடைவீர்!



(அம்மாவைக் கண்டு மிரளாதீர் கைவண்ணம் பார்ப்பார்,
விலையைக் கேட்பார் அசந்தே போவார்!)



இலவசம்

பெயின்ட்-எ-போஸ்ட்டர்
இம்முகவரிக்கு எழுதிப் பெறவும் :
ஃபெவிக்ரில், போஸ்ட் பாக்ஸ் 17437,
அந்தேரி (கிழக்கு), பம்பாய்-400 059.



புதிய
ஃபெவிக்ரில்
ஸ்டூடன்ட்ஸ்
போஸ்ட்டர் கலர்கள்




everest/91/PIL/117 tm

பெயர் ______ வயது ______
முகவரி ______
______
பள்ளிக்கூடம் ______

CDM



# பழைய பெயரில் புதிய நாடு

சுமார் ஐம்பது நாடுகளின் பிரதிநிதிகளின் முன் கடந்த ஏப்ரல் மாதம் 27ந்தேதி யுகோஸ்லாவியாவின் பெடரல் பார்லிமெண்ட் கூடி புதிய நாடு உருவானதாக அறிவித்தது. 'பெடரல் ரிபப்ளிக் ஆப் யுகோஸ்லாவியா' என்ற இந்தப் புதிய நாட்டில் முன்பு யுகோஸ்லாவியாவில் இருந்த ஆறு குடியரசுகளில் இரண்டே உள்ளன. அவை செர்பியாவும் மாண்டநீக்ரோவும் ஆகும். மற்ற நான்கு குடியரசுகளும் ஒரு ஆண்டிற்கு முன்பே தனியாகப் போய்விட்டன.

ஆறுமாத காலமாக இங்கு நடந்த இனக் கலவரங்களில் பலர் இறந்தனர். எவ்வளவோ வீடுகள் பாழாக்கப்பட்டன. பலர் வேறு பகுதிகளுக்கு குடிபெயர்ந்து போனார்கள். இந்நிலையில் 'யுரோபியன் கம்யூனிடி' என்ற அமைப்பு தலையிட்டு 15 முறை அமைதிக்கான ஒப்பந்தங்களைச் செய்வித்தன. ஆனால் அப்பகுதியில் அமைதி சில நாட்களுக்குக் கூட நிலைக்கவில்லை.

முடிவில் ஐ.நா. சபை அமைதி காக்கும் படையை அப்பகுதிக்கு அனுப்பத் தீர்மானித்தது. மார்ச் மாதத்தில் நம் நாட்டைச் சேர்ந்த லெப்டினெண்ட் ஜெனரல் சதீஷ் நம்பியார் தலைமையில் 17 நாடுகளிலிருந்து 14,000 வீரர்கள் கொண்ட படை அங்கு சென்றது.

இதே சமயம் முஸ்லீம்கள் அதிகமாக உள்ள ஜார்ஜியா, ஹெர்ஸ்கோவினாலாவிஸ் மக்கள் பொது அபிப்பிராயம் எடுக்கப்பட்டு ஜார்ஜியா யுகோஸ்லாவியாவிலிருந்து பிரிந்து போக வேண்டும் என்பது வெளியாயிற்று. இதனால் முஸ்லீம்களுக்கும் செர்பியர்களுக்கும் க்ரோட்சியர்களுக்கும் இடையே பகைமை மூண்டு இனக் கலவரங்களும் வன்முறைகளும் அதிகரித்தன.

ஆறாவது குடியரசான மாசிடோனியாவும் பிரிந்து போக வேண்டும் என்று தீர்மானித்தது. எனவே பிரிந்த குடியரசுகளான ஜார்ஜியா, கிரோஷியா, ஸ்லேவேனியா, மாசிடோனியா ஆகிய குடியரசுகளும் 'யுரோபியன் கம்யூனிடி'யின் அங்கீகாரத்தை எதிர்பார்த்துக் கொண்டிருக்கின்றன.

இப்போது இரண்டு குடியரசுகளே உள்ளன. யுகோ குடிய்ரசு 20-ம் நூற்

றாண்டில் இந்நாட்டில் ஏற்பட்ட மூன்றாவது குடியரசு. முதலாவது உலகப் போரின் போது 1917-ல் ஏற்பட்ட 'கார்ப்' ஒப்பந்தப்படி போருக்குப்பின் செர்பியர்கள், கிரோட்கள், ஸ்லாவியர்கள் சேர்ந்து ஒரே நாட்டை உருவாக்கினார்கள். இந்த ஒப்பந்தம் 1918 டிசம்பர் 1ந் தேதி அமுலுக்கு வந்தது. 1929-ல் இந்நாட்டிற்கு யுகோஸ்லாவியா எனப் பெயரிடப்பட்டது.

இரண்டாவது உலகப் போர் மூண்டதும் 1941-ல் ஜெர்மனியின் ஹிட்லர் யுகோஸ்லாவியாவை ஆக்கிரமிக்கவே, மார்ஷல் டிட்டோ ஜெர்மானியப் படைகளை விரட்டி கம்யூனிஸப் பெடரல் ரிபப்ளிக்கை நிறுவினார். அவரே பிரதம மந்திரியாகவும் ஆனார். 1953-ல் அவர் அந்நாட்டு அதிபராகவும் ஆனார். 1974-ல் யுகோஸ்லாவியா ஆறு குடியரசுகளைக் கொண்ட கூட்டமைப்பு நாடாகியது.

டிட்டோ 1980-ல் இறந்தார். அதன் பின் நாட்டில் பொருளாதாரச் சீர்குலைவும், இனக் கலவரங்களும், பிராந்திய வெறியும் அதிகரித்தன. அதனால் நாட்டின் நிலையற்ற தன்மை ஏற்பட்டு இராணுவ மோதல்கள் அதிகரித்தன. தற்போது செர்பியா, மாண்டிநீக்ரோ சேர்ந்த புதிய குடியரசு முந்தைய குடியரசின் ஜனத்தொகை அடிப்படையில் 44 சதமும், இயற்கை வளத்தில் 55 சதமும் கொண்டது.

இனியாவது யுகோஸ்லாவியாவில் அமைதி ஏற்பட்டு நல்வாழ்வு காணும் என்று உலக நாடுகள் எல்லாம் எதிர்பார்க்கின்றன.





# என் மகளாக்கும்!

கைலாசமும் மீனாட்சியும் தம் மகள் சிவகாமியை பாசத்துடன் வளர்த்தாலும் கட்டுதிட்டங்ளுக்கு உட்பட்டே நடக்கச் செய்தார்கள். சிவகாமி வளர்ந்து பெரியவளானாள். பணக்காரனான கைலாசத்தின் ஒரே மகளான சிவகாமியைப் பல பணக்காரர்கள் தம் வீட்டு மருமகளாக்கிக்கொள்ள விரும்பினாலும் அதை வெளிப்படையாகச் சொல்லத் தயங்கினார்கள் ஏனெனில் கைலாசத்தின் மூன்று சகோதரிகளின் மூன்று மகன்கள் முறை மாப்பிள்ளைகள் என இருந்தார்களே.

கைலாசத்தின் மூன்று மருமகன்கள் நடராஜன், சிவராஜன், குருராஜன் என்பவர்கள். இவர்களில் நடராஜனின் குடும்பம் மற்ற இருவரின் குடும்பங்கள் போல அவ்வளவு பணக்காரக் குடும்பம் அல்ல. மற்ற இருபணக்காரக் குடும்பங்களில் அதிகப் பணம் படைத்தது குருராஜனின் குடும்பமே. அதனால் மீனாட்சி குருராஜனையே தன் மாப்பிள்ளையாக ஆக்கிக்கொள்ள விரும்பினாள்.

கைலாசமோ தன் மகள் விரும்புபவனையே அவளுக்குத் திருமணம் செய்து வைக்க நினைத்தான். அதனால் அவளிடம் ஒருநாள் தனிமையில் ''உன் மூன்று அத்தான்களில் யாரை நீ மணக்க விரும்பினாலும் நான் அவனை உனக்குக் கல்யாணம் செய்து வைக்கிறேன். உன் அம்மா மாதிரி நீ குருராஜனைத் தான் மணம் செய்து கொள்ள வேண்டும் என்று வற்புறுத்தமாட்டேன். உன் அபிப்பிராயம் என்ன?'' என்று கேட்டான்.

சிவகாமியும் ''அப்பா! என் திருமண சம்மந்தமாய் இந்த மூவரைப்

—சிவனார் செல்வன்—



பற்றி இப்போது தானே கூறினீர்கள். இதுவரை இவர்களது குணங்களை நான் சரிவர கவனிக்கவில்லை. அவர்களைப் பார்த்தும் அவர்களது நடத்தையைக் கண்டும் அறிந்த பிறகே நான் ஒரு முடிவுக்கு வர முடியும்" என்றாள்.

கைலாசமும் "அப்படியா? அந்த மூவரையும் இந்த வருடப் பிறப்பின் போது நம் வீட்டிற்கு வரவழைக்கிறேன். அவர்களைப் பார்த்துவிட்டு நீ உன் முடிவைச் சொல்" என்றான்.

கைலாசம் தன் மூன்று சகோதரிகளின் குடும்பங்களை அந்த ஆண்டில் புத்தாண்டு விழாக் கொண்டாடத் தன் வீட்டிற்கு வரும்படி அழைத்தான். அவர்களும் தம் மகன்களோடு வந்தார்கள். நடராஜன் எளிய ஆடை அணிந்திருந்தான். சிவராஜன் பட்டாடை உடுத்து வாசனை திரவியங்களைப் பூசிக் கொண்டிருந்தான். குருராஜன் சற்றுக் கிழிந்த பட்டுச்சட்டை அணிந்திருந்தான். அவர்கள் வருடப்பிறப்பிற்கு முதல் நாளே கைலாசத்தின் வீட்டிற்கு வந்தார்கள்.

அன்று காலையில் தெருவில் மல்லிகைப்பூ விற்கும் பெண் வரவே சிவகாமி அவளை அழைத்து ஒரு முழம் பூ கொடுக்கச் சொன்னாள். அப்போது சிவராஜன் "ஒரு முழமா? ஐந்து முழமாக வாங்கிக் கொள்" என்று கூறி அதற்கான பணத்தை எடுத்துக் கொடுத்தான். குருராஜனோ "இது தண்டச் செலவு" மாமாவின் தோட்டத்துச் செடிகளில் பலவித பூக்கள் பூத்திருக்கிறதே "என்றான். நடராஜனோ "அங்கு மல்லிகைப் பூ இல்லை. அதனால் சிவகாமி தனக்குத் தேவையான ஒரு முழம்பூ கேட்டாள். அதற்குமேல் வாங்குவது தேவையை விட அதிகம். அது வீண்தானே" என்றான்.

சிவகாமி சிரித்துக் கொண்டே "எனக்கு ஒரு முழம் பூவே போதும். ஆனால் சிவா அத்தான் ஐந்து முழம் வாங்கிவிட்டார். வேண்டாம் என்று சொல்லாமல் வாங்கிக் கொள்கிறேன்" என்று கூறிப் பூவை வாங்கிக் கொண்டு போனாள்.

சற்று நேரம் கழித்து கைலாசத்தின் வீட்டிற்கு வழக்கமாகப் புடவை விற்பவன் வந்தான். அவன் சிவகாமியிடம் புதுமாதிரி புடவைகள் வந்திருப்பதாகக் கூறவே அவளோ "இப்போது வேண்டாம் போன வாரம்தானே உன்னிடம் இரண்டு புடவைகள் வாங்கினேன்" என்றாள்.

இதற்குள் அங்கே வந்த சிவராஜன் "புத்தாண்டிற்கும் ஒரு புதுப்புடவையை எடுத்துக்கொள்" எனக்கூறிப் புடவைக்காரனிடம் "நல்ல புடவையாக காட்டு" என்றான். புடவைக்காரனும் இரண்டு புடவைகளை எடுத்துக்காட்டவே அவற்றில் ஒன்று தனக்குப் பிடித்ததாக சிவகாமி கூறினாள். புடவைக்காரன் அதன் விலை ஐநூறு ரூபாய் எனவே சிவராஜன் அந்தப் பணத்தைத் தன் சட்டைப் பையிலிருந்து எடுத்து கொடுத்தான்

அன்று மத்தியான்னம் சிவகாமி தன் அறையில் புத்தகங்களை எடுத்துப் பார்த்துக் கொண்டிருந்தாள். அவள் அப்போது திருக்குறள் புத்தகத்தை எடுத்துப் பிரித்துப் படிக்கலானாள். பிறகு அவள் அதற்கு உரையைப் படித்தாள். அப்போதும் அவள் மனம் திருப்தி அடையவில்லை.

சற்று உரத்த குரலில் அவள் "ஆகா! இந்தக் குறளுக்குப் பரிமேலழகர் கொடுத்த விளக்கம் சரியாகவே இருக்கிறது. ஆனால்



குறளுக்கு விளக்க உரை எழுதிய மற்றவரான மணக்குடவர் என்ன சொல்கிறார் என்பது தெரியவில்லையே. அந்தப் புத்தகமும் என்னிடம் இல்லையே என்ன செய்வேன்" எனக்கூறினாள்.

இப்படி அவள் கூறியது அந்தப் பக்கமாக வந்த நடராஜனின் காதில் விழுந்து விட்டது. அவன் உடனே அவ்வூரிலுள்ள புத்தகக் கடைக்குப் போய் மணக்குடவர் உரைநூலை வாங்கி வந்து சிவகாமியிடம் கொடுத்தான். அவளும் அதை மகிழ்ச்சியுடன் வாங்கிக் கொண்டு அவனுக்கு நன்றி செலுத்தினாள்.

அன்றிரவு சாப்பிட்டு விட்டுக் கொல்லைப்புறம் போன சிவகாமி



அங்கு நடராஜனும் சிவராஜனும் பேசிக் கொண்டிருப்பதைப் பார்த்து ஒரு பக்கமாக ஒதுங்கி நின்றார்.

சிவராஜன் நடராஜனிடம் "நடனூ! நான் கொண்டு வந்த பணத்தை சிவகாமிக்குப் புடவை வாங்கிக் கொடுத்ததில் செலவு செய்து விட்டேன். இருநூறு ரூபாய் கடனாகக்கொடு. ஊருக்குப் போன தும் உனக்கு அனுப்பி விடுகிறேன்" என்றான்.

நடராஜனோ "என்னிடம் இரு நூறு ரூபாய்தானிருந்தது. அதை மாமா ஏதோ அவசரம் என்று சற்று முன்தான் கேட்டு வாங்கிப் போனார். அதுசரி. சிவகாமி வேண்டாம் என்று கூறியும் நீ உன் பணத்தை எல்லாம் கொடுத்து புடவை வாங்கியது வீண் செலவு தானே. உனக்கு உடனடியாகப் பணம் வேண்டி இருந்தால் குரு ராஜனைக் கேட்டுப்பார். கிடைக்க லாம்" என்றான்.

சிவராஜனோ "அவனிடமா? கஞ்சப்பயலாயிற்றே. நீயே பார் பூ வாங்கும் போதும்,புடவை வாங் கும் போதும் எப்படி ஒதுங்கி விட் டான்! சரி நான் எப்படியாவது சமாளித்துக் கொள்கிறேன். என மோதிரத்தை நான் அடகு வைத் தால் பணம் கிடைத்துவிடும்" என்றான்.

அவர்கள் பேசியதைக் கேட்டு விட்டு சிவகாமி தன் தந்தையிடம் போய் "அப்பா! நீங்கள் நடராஜ அத்தானிடம் இருநூறு ரூபாய் கடன் வாங்கினீர்களாமே. உண் மையா?" என்று கேட்டாள். கைலாச மும் "இந்த விஷயம் உனக்கு எப்படித் தெரிந்தது?" என்று கேட்டான். சிவகாமி தான் நடராஜ னும் சிவராஜனும் பேசிக் கொண் டிருந்ததைக் கேட்டதாகக் கூறி னாள்.

கைலாசமும் "ஆமாம் நடராஜன் தான் என்னிடம் வந்து சிவராஜன் என்னிடம் பணம் கடன் கேட்டா லும் கேட்பான். நீங்கள் என்னிடம் இருந்த பணத்தைக் கேட்டு வாங் கிக் கொண்டதாகச் சொல்லி விடு கிறேன். ஏனென்றால் அவனுக்குக் கடன் கொடுத்தால் லேசில் திரும்பி

வராது. கண்டபடி செலவும் செய்ப வன் என்று கூறி வேண்டிக் கொண் டான். நானும் அப்படியே சொல்வ தாகக் கூறினேன். உண்மையில் அவனிடம் பணம் வாங்கவில்லை'' என்றார்.

அப்போது சிவகாமி சிரித்துக் கொண்டே ''பேஷ் பேஷ். கதை நன்றாக இருக்கிறது. ஆனால் நீங் கள் உண்மையிலே நடராஜனிடம் இருநூறு ரூபாய் கடன் கேளுங் கள். என்ன நடக்கிறது. என்று பார்ப்போம்'' என்றாள்.

அதுகேட்டுக் கைலாசம் ''எதற்கு நாம் போய் அவனிடம் கடன் கேட்க வேண்டும்? நம்மிடம் பணமா இல்லை?'' எனவே சிவகாமியும் ''எல்லா ஒரு காரணமாகத்தான். நீங்கள் கேட்டுத்தான் பாருங்களேன். நடராஜ அத்தான் என்ன சொல் கிறார் என்று பார்க்கலாம்'' என் றாள். கைலாசமும் அவ்வாறே செய்வதாகக் கூறினான்.

புத்தாண்டைக் கொண்டாடிய தும் கைலாசத்தின் மூன்று சகோ தரிகளின் குடும்பத்தினரும் தன் ஊருக்குக் கிளம்பிச் சென்றார் கள். அவர்கள் போனபின் கைலாச மும் உள்ளே வந்து ''சிவகாமி! நீ சொன்னபடி நடராஜனிடம் பணம் கேட்டேன். அவனும் பணத்தைக் கொடுத்ததோடு எனக்கு சௌகரி யப்பட்டபோது திருப்பிக் கொடுத் தால் போதும் என்றும் சொன்னான்''



என்றான்.

அதைக்கேட்ட சிவகாமியின் முகம் மலர்ந்தது. அதைக் கவனித்த கைலாசம் ''சிவகாமி! நீ உன் மன திற்குப் பிடித்தவன் யாரென்று தீர்மானித்து விட்டாய் என்று தெரி கிறது. நடராஜன்தானே அவன்'' என்று கேட்டான்.

சிவகாமி வெட்கப்பட்டுத் தலை குனிந்து மௌனமாக இருந்தாள். தந்தையும் மகளும் பேசியதைக் கேட்ட மீனாட்சி ''அப்பாவும் மகளும் சேர்ந்து இவளுக்குக் கண வனாகப் போகிறவன் நடராஜன் தான் என்று தீர்மானித்து விட்டீர் களா? ஆமாம் நான் கேட்கிறேன் குருராஜன் எந்த விதத்தில் நடரா ஜனுக்குக் குறைந்தவன்? சொல்

லுங்கள் கேட்கலாம்'' என்று கேட்டாள்.

சிவகாமி தன் தாயாரைப் பார்த்து "அம்மா! எப்படிக் குறைந்தவன் என்று நான் சொல்கிறேன். பணம் சம்பதித்தால் மட்டும் போதாது. அதை புத்திசாலித்தனமாகச் செலவிடவும் தெரிய வேண்டும். குருராஜன் மகா கஞ்சன். தன் தேவைக்குக் கூட செலவு செய்ய யோசிப்பவன். சிவராஜனோ அவனுக்கு நேர் எதிரிடை. வீண் செலவு செய்பவன். பணம் இல்லை என்றால் எப்படியாவது கடன் வாங்க முயல்வான். ஆனால் நடராஜன் எதற்கு எவ்வளவு செலவு செய்ய வேண்டும் என யோசித்துச் செயல்படுபவன். வேண்டாம் என்று கூறியும் பூவும் புடவையும் வாங்கி எனக்குக் கொடுத்துத் தான் ஆடம்பரமாக வாழ்வதைப் பறைசா றியவன் சிவராஜன். இப்படிப் பட்டவனுக்குக் கடன் கொடுத்தால் அ ு திரும்பக் கிடைக்காது என்று நினைத்தே நடராஜன் அவனுக்குப் பணம் கொடுக்கவில்லை. அதே பணத்தை அப்பா கேட்டபோது நடரா்ஜன் உடனே கொடுத்தான். அது மட்டுமல்ல நடராஜன் நான் விரும்பிய புத்தகத்தைக் கடையிலிருந்து வாங்கிக் கொண்டுவந்து கூடக் கொடுத்தான். என்மனம் நினைப்பதை அறிந்து அதன்படி நடப்பவன் நடராஜன். குருராஜனோ பணம் செலவாகி விடப்போகிறதே என்று கல்லுப்பிள்ளையார் போல அசையாமல் இருந்தான். எனவே நடராஜன் மற்ற இருவர்களை விட எவ்வளவோ மேலானவன்'' என்றாள்.

மீனாட்சியால் எதுவும் பேச முடியவில்லை. அப்போது கைலாசம் "பார்த்தாயா என் மகளின் புத்திசாலித்தனத்தை!'' என்றான். மீனாட்சியோ குறுக்கிட்டு "அவள் யார்? என் மகளாக்கும்!'' என்று கூறிப் பெருமைப்பட்டுச் சிரித்தாள்.






## 3

*[வீரபுரத்து இளவரசியின் உடல் நலன் திடீரெனக் குன்றவே அவளை சாரலை சரொவரத்தின் மத்தியிலுள்ள மாளிகைக்கு சோதிடரின் யோசனைப்படி அழைத்துச் சென்றனர். மன்னனும் அரசியும் அவளை இருமுறைகள் போய்ப் பார்த்து விட்டு வந்தனர். மூன்றாவது முறை போனபோது அவள் மாயமாய் மறைந்து விட்டாள். அது எப்படி என்றால்—]*

நள்ளிரவில் தன்னை யாரோ தட்டி எழுப்பியது கண்டு இளவரசி வித்தியாவதி அது கமலம்மாள் தான் என நினைத்து "ஏன் இப்போது என்னை எழுப்புகிறாய், கமலம்மா!" என்று பாதிக் கண்ணை மூடிக் கொண்டே கேட்டாள்?

அவளை எழுப்பியவளும் "ஆமாம் வித்யா! மகாராஜாவுக்கு உடம்பு சரி இல்லையாம். உன்னை உடனே பார்க்க வேண்டும் என்று சொல்லி அழைத்து வரச் சொன்னாராம். எழுந்திரு போகலாம்" என்றாள். அதைக்கேட்ட வித்தியா "என்ன! அப்பாவுக்கு உடம்பு சரி இல்லையா? ஆனால் எப்படிப் போவது? நம் அரண்மனை சோதிடர் நான் இங்கிருந்து எங்குமே போகக் கூடாது என்று கூறி இருக்கிறாரே" என்றான்.



அந்தப் பெண்மணியோ "அரசர் தன் உடம்பு சரி இல்லை என்று உன்னைப் பார்க்க அழைத்து வரச் சொன்னார் என்றால் அவர் சோதிடரையும் கண்டிப்பாகக் கலந்து ஆலோசித்தே இருப்பார். நாம் போய் அவரைப் பார்த்து விட்டு உடனே திரும்பி வந்து விடலாம். கிளம்பு. நீ மிகவும் சோர்ந்து போயிருக்கிறாய். தூக்கக் கலக்கம் வேறு. அதனால் நான் கைத்தாங்கலாக உன்னைப் பிடித்து அழைத்துச் செல்கிறேன்" என்றாள்.

வித்தியாவதியும் எழுந்து வரவே அந்தப் பெண்மணியும் இருட்டில் அவளை அழைத்துக்கொண்டு சென்றாள். வித்தியாவதி தன்னை அழைத்துக்கொண்டு சென்று கொண்டிருப்பவள் தன் கிழப் பணிப்பெண் கமலம்மாள் என்றே நினைத்து விட்டாள். அரைத் தூக்கத்திலும் இருட்டிலும் அவள் அந்தப் பெண்ணின் முகத்தையும் சரியாகப் பார்க்கவில்லை.

அந்தப் பெண்மணி அந்த மாளிகையின் வேறு பக்கம் தயாராக இருந்த படகிற்கு வித்தியாவை அழைத்துச் சென்றாள். அதில் அவளை ஏற்றித் தானும் ஏறி உட்கார்ந்தாள். பிறகு அவள் அதன் படகோட்டியிடம் 'போகலாம்' எனவே படகும் அங்கிருந்து சென்றது.

படகில் ஒரு ஓரமாக உட்கார்ந்திருந்த வித்தியாவதி எதுவும் பேசவில்லை. தன் தந்தையின் உடல் நிலை எப்படி இருக்கிறதோ என்று நினைத்துக் கவலைப்பட்டுக் கொண்டிருந்தாள். படகு கரையை அடைந்த போது அங்கு ஒரு பல்லக்கு தயாராக இருந்தது. அதைச் சுமந்து செல்ல ஆட்களும் தயாராக இருந்தார்கள்.

அந்தப் பெண்மணி வித்தியாவை அந்தப் பல்லக்கினுள் உட்கார வைத்தாள். பிறகு அதனைச் சுமந்து செல்லும்படி அந்த ஆட்களிடம் கூறிவிட்டு அவள் அதன் பின்னால் நடந்து சென்றாள். பல்லக்கில் அமர்ந்திருந்த வித்தியா விரைவில் அரண்மனையை அடைந்து விடலாம் என நினைத்தாள். ஆனால் வெகு நேரமாகியும் அரண்மனை

வராது போகவே பல்லக்கின் திரையை விலக்கி அவள் வெளியே பார்த்தாள். பல்லக்கு நகரினுள் செல்லாமல் ஏதோ ஒரு காட்டு வழியே மலை மீது சென்று கொண்டிருப்பது தெரிந்தது.

வித்தியா பல்லக்கு தூக்கிகளிடம் எதுவும் கேட்கவில்லை. கமலம்மாளிடம் கேட்கலாம் என நினைத்து வெளியே எட்டி பார்த்தாள். அவளும் எங்கும் தென்படவில்லை. இது என்ன விபரீதம் என அவள் நினைத்தபோது பல்லக்குத் தூக்கிகள் அதைத் தம் தோள்களிலிருந்து கீழே இறக்கி வைத்தார்கள்.



அப்போது ஒரு பெண் குரல் "இளவரசி! பல்லக்கிலிருந்து இறங்கு" என்றது. அது கமலம்மாவின் குரல் அல்ல என்பது அவளுக்குத் தெரிந்தது. வித்தியாவும் இறங்கி நின்றபோது தன் எதிரே மிகப் பெரிய மாளிகை ஒன்று இருப்பதைக் கண்டாள். பிறகு தன்னை வெளியே வரச்சொன்னவளைப் பார்த்தாள். அவள் தோற்றத்தில் கமலம்மாள் போல இருந்தாலும் உண்மையில் கமலம்மாள் அல்ல என்று இளவரசிக்குத் தெரிந்துவிட்டது. தான் ஏதோ ஒரு சூழ்ச்சியில் அகப்பட்டு விட்டதை அவள் உணர்ந்தாள்.

அப்போது அந்தப் பெண்மணி "இனிமேல் இதுதான் நீ இருக்க வேண்டிய இடம்" என்றாள். அப்போது வித்தியா "இது என்ன மாளிகை?" என்று கேட்கவே அந்தப் பெண் எதுவும் பதில் சொல்லாமல் நின்றாள். அப்போது இளவரசி "நீ யார்? என்னை இங்கே எதற்காக அழைத்து வந்தாய்? பொய் சொல்லி ஏன் என்னை ஏமாற்றினாய்? என்னை என் தந்தையின் அரண்மனைக்கு கொண்டு செல்லாமல் இந்த மாளிகையில் கொண்டு வந்து விட்டிருக்கிறாயே! இதெல்லாம் என்ன மூடுமந்திரம்?" என்று கேட்டாள்.

அந்தப் பெண்மணியும் "இளவரசி! உன் கேள்விகளுக்கு நான் பதில் சொல்லப்போவது இல்லை. ஆனால் நீ இருக்கும் இந்த மாளிகையின் பெயரை மட்டும் கூறு



கிறேன். இதனை மாயமாளிகை என்று கூறுவார்கள். இங்கு எல்லா வசதிகளுடனும் வாழலாம். உனக்கு எவ்வித ஆபத்தும் வராது. உன்னை பத்திரமாகப் பார்த்துக்கொள்ளும் பொறுப்பை என்னிடம் ஒப்படைத்திருக்கிறார்கள். அதன்படி நான் நடப்பேன்!'' என்றாள்.

வித்தியாவும் "எத்தனை நாட்களுக்கு இந்த ஏற்பாடு?'' என்று கேட்கவே அவளும் "அது எனக்குத் தெரியாது. என்னை நீ உன் பணிப்பெண் கமலம்மாவின் பெயரைக் கொண்டே அழைக்கலாம். என் எஜமானி உன்னை எவ்வளவு காலம் இங்கே வைத்திருப்பார்களோ அதுவரை நீ இங்கே இருக்க வேண்டியதுதான்'' என்றாள்.

வித்தியாவும் "யார் உன் எஜமானி?'' என்று கேட்கவே அவளும் "அவள் யார் என்பது போகப் போக உனக்குத் தெரிந்துவிடும். இனி நாம் மாளிகைக்குள் போகலாம். நீ களைத்துப் போயிருக்கிறாய். உனக்குச் சரியான தூக்கமும் இல்லை. எனவே நீ இப்போதைக்குப் படுத்து நன்கு தூங்குவது தான் நல்லது'' என்றாள்.

அவள் பல்லக்கு தூக்கிகளைப் போகச் சொல்லிவிட்டு இளவரசியை அழைத்துக்கொண்டு அந்த மாளிகைக்குள் சென்றாள். அந்த மாயமாளிகை மிக அழகானது. பெரிய பெரிய அறைகள். வழவழப்பான சுவர்கள். எங்கும் நிலைக் கண்ணாடிகள். இவற்றையெல்லாம் பார்த்துக்கொண்டே வித்தியாவதி அந்தப் பெண்ணின் பின்னால் சென்று கொண்டிருந்தாள். ஒரு பெரிய கூடத்தைக் கடந்து அதன் ஓரத்தில் அமைத்த படிக்கட்டை அவர்கள் அடைந்தார்கள். அங்குள்ள படிகளில் ஏறி அவர்கள் மாடிப் பகுதியை அடைந்தார்கள்.

அங்கு ஒரு அறைக்குள் அப்பெண்மணி வித்தியாவதியை அழைத்துச் சென்றாள். அது மிக அழகாக அலங்கரிக்கப்பட்டிருந்தது. கலை அழகு ததும்பும் பல பொருள்கள் ஆங்காங்கு வைக்கப்பட்டிருந்தன. ஓரிடத்தில் பட்டு மெத்தை போடப்பட்ட கட்டில்



இருந்தது.

அந்தப் பெண் இளவரசியிடம் "நீ அந்தக் கட்டிலில் சுகமாகப் படுத்துத் தூங்கலாம். நான் வந்து எழுப்பும்வரை நீ எழுந்திருக்க வேண்டாம் தெரிந்ததா?" என்று சற்றுக் கடுமையான குரலில் கூறினாள்.

வித்தியாவதியும் அதற்கு மறுப்பு தெரிவிக்காமல் இருப்பதுதான் நல்லது என்று எண்ணிப் பேசாமல் இருந்தாள். அவள் அக்கட்டிலில் படுத்துக் கண்ணையும் மூடிக் கொண்டாள். அந்த பெண்மணி யார், தன்னை ஏன் அங்கு கொண்டு வர வேண்டும் என்றும் யோசிக்கலானாள். அவள் மனம் தன் தந்தை ஒரு வேளை உண்மையிலேயே உடல்நலம் கெட்டு படுத்த படுக்கையாக இருக்கிறாரோ என்று சந்தேகப்படலாயிற்று.

அவள் தன் தாய்தந்தையர் மனம் தன்னைக் காணாது என்ன பாடுபடுமோ என்று கவலைப்படலானாள். கமலம்மாள் என்ன செய்து கொண்டிருப்பாளோ? இனி இந்த மாய மாளிகையில் என்னவெல்லாம் நடக்கப் போகிறதோ? இப்படியாகப் பலவிதமாய் எண்ணியவாறே படுத்திருந்தாள். மெதுவாகத் தூக்கமும் அவள் கண்களைத் தழுவியது.

சேனாதிபதி உக்கிரசேனன் தான் வஜ்ஜிரேஸ்வரியின் சகோதரன். படகோட்டி அவனைக் கண்டு மன்னனின் செய்தியைக் கூறவே அவன் உடனேயே கிளம்பி வசந்த மாளிகையைப் போய் அடைந்தான். மன்னன் வித்தியா மாயமாய் மறைந்து போனதைக் கூறவே உத்திரசேனன் படகோட்டியைப் பார்த்து "நீ என்ன செய்தாய் சொல்" என்று கேட்டான்.

படகோட்டியும் அவனை வணங்கி "நான் எதுவுமே செய்யவில்லை. நேற்று மத்தியான வேளையின்போது வசந்த மாளிகைக்கு உணவு எடுத்து வந்த பணிப்பெண்கள் இருவரை இங்கு கொண்டு வந்துவிட்டேன். அவர்கள் உணவை வைத்து விட்டு வரவே அவர்களை இங்கிருந்து படகில் ஏற்றிக்

கொண்டு போய்க் கரையில் விட்டேன் அதற்கு பிறகு என் படகு இங்கு வரவில்லை'' என்று கூறினான்.

உக்கிரசேனன் சில நிமிடங்கள் யோசனை செய்தான். அவன் மன்னனிடம் ''இளவரசி இங்கிருந்து கரைக்குப் போக வேறு எந்தப் படகும் கிடையாது. அதனால் அவள் படகில் சென்றாள் என்பதை ஒதுக்கி விடலாம். ஒருவேளை அவள் நீந்திச் சென்று கரையை அடைந்திருக்கலாமோ எனச் சந்தேகித்தால் கூட இவ்வளவு தூரம் அவளால் நீந்த முடியாது. மேலும் அவள் இங்கிருந்து தானே செல்ல ஒரு காரணமும் இல்லை. எனவே யாரோ திருட்டுத்தனமாக இந்த மாளிகைக்குள் புகுந்து அவளைப் பலவந்தமாக தூக்கிக்கொண்டு தான் போயிருக்க வேண்டும். இது தான் நடந்திருக்க வேண்டும்'' என்றான்.

மன்னன் சேனாதிபதி கூறியதைக் கேட்டுக்கொண்டிருந்தான். பிறகு ''சரி, கமலம்மாள் மாத்திரம் இங்கு இருக்கட்டும். ஒரு வேளை எப்படியாவது என் மகள் வந்தால் அவளுக்கு உதவியாக இருப்பாள். நாம் மூவரும் அரண்மனைக்குப் போகலாம்'' என்றான். அதன்படி மன்னனும், ராணியும் சேனாதிபதியும் படகில் ஏறிக்கொள்ள படகோட்டி அதனை ஓட்டிப்போய் அவர்களைக் கரையில் இறக்கி விட்டான்.

வித்தியாவதியின் நிலை என்ன? அவள் எங்கே போயிருக்கக்கூடும்? யார் அவளைக் கவர்ந்து சென்றார்கள்? அவள் எங்கிருக்கிறாள் எனக் கண்டுபிடித்து அவளை மீட்டு வருவது எப்படி? இப்படிப் பல கேள்விகள் அவர்கள் மனதில் எழுந்தன. இவை பற்றி யோசித்தவாறே அவர்கள் அரண்மனைக்குள் சென்றார்கள்.

(தொடரும்)



# அப்பாவைக் கூப்பிடு!

ஒரு ஜமீன்தாரரின் மாந்தோப்பில் எக்கச்சக்கமாக மரங்களில் மாங்காய்கள் காய்த்துத் தொங்கின. ஆனால் அத்தோப்பிலிருந்து தினமும் நூற்றுக்கும் மேலாகக் காய்கள் திருடு போயின. இதைக் கண்ட ஜமீன்தாரர் தோப்பின் காவல்க்காரனைக் கூப்பிட்டு திருடனைக் கண்டுபிடிக்காவிட்டால் அவன் வேலையே போய்விடும் என்று எச்சரித்தார்.

காவல்க்காரனும் எச்சரிக்கையுடன் காவல்புரியலானான். அன்றே பத்து வயதுச் சிறுவன் ஒருவன் மாங்காய் திருடுவதைக் கண்டு அவனைக் கையும் களவுமாகக் காவல்காரன் பிடித்துவிட்டான். சிறுவனைப் பார்த்த அவன் "நீ பழனியாண்டியின் மகன்தானே?" என்று கேட்க அச்சிறுவனும் ஆம் என்று தலையை ஆட்டினான்.

காவல்க்காரனும் "இப்படித் திருடும் உன்னை நான் சவுக்கால் அடிக் கட்டுமா? அல்லது உன் தந்தையைக் கூப்பிட்டு அடிக்கச் சொல்லட்டுமா?" என்று கேட்டான். சிறுவனும் "என் தந்தையே அடிக்கட்டும் . இதோ அவரைக் கூப்பிடுகிறேன்" எனக்கூறி "அப்பா! இங்கே வா" என்று குரல் கொடுத்தான்.

அடுத்த நிமிடமே ஒரு மாமரத்திலிருந்து ஒரு சாக்கு மாங்காயோடு பழனியாண்டி கீழே குதித்து வரவே காவல்க்காரன் அசந்து போனான்!






# மறுத்த காரணம்

தன் முயற்சியில் சற்றும் மனம் தளராத விக்கிரமன் மீண்டும் மரத்தின் மீது ஏறி அதில் தொங்கும் உடலைக் கீழே வீழ்த்தினான். பின்னர் கீழே இறங்கி அவன் அதைச் சுமந்து கொண்டு மயானத்தை நோக்கிச் செல்கையில் அதனுள்ளிருந்த வேதாளம் எள்ளி நகைத்து ''மன்னனே! நீ இந்த இரவு வேளையில் சுகமாகப் பஞ்சணையில் படுத்து உறங்காமல் ஏன் இப்படிச் சிரமப்படுகிறாய்? உன் சொந்த வாழ்வில் ஏதாவது சிக்கலான பிரச்னையா? உன் போல ஒரு அரசகுமாரன் சிக்கலில் மாட்டிக் கொண்ட கதையைக் கூறுகிறேன். கவனமாகக் கேள்'' என்று கூறிக் கதையை ஆரம்பித்தது.

விதேக நாட்டு மன்னன் விஜயசேனன். அவனது மகன் வீரசேனன். வீரசேனன் தன் மகனுக்கு மணம்

## வேதாளம் சொல்லும் கதை



செய்து விட்டு அவனைச் சிம்மாசனத்தில் அமர்த்தி விட்டுத்தான் ஓய்வுபெற நினைத்தான். வீரசேனனுக்கு மணம் செய்ய அங்க நாட்டு மன்னனின் மகள் அமிர்தவல்லியை அவன் தேர்ந்தெடுத்தான். வீரசேனனும் அமிரதவல்லியும் ஒருவரையொருவர் விரும்புகிறார்கள் என்று தெரிந்தே விஜயசேனன் இவவாறு முடிவு செய்தான். அங்க மன்னனும் மகிழ்ச்சியுடன் இத்திருமணத்திற்குச் சம்மதித்தான். ஆனால் விஜயசேனனின் புரோகிதர் முகூர்த்த நாளைக் குறிப்பிடாததால் தாமதம் ஏற்பட்டது.

இந்நிலையில் ஒரு நாள் வீரசேனன் தன் நண்பனுடன் தேரில் அமர்ந்து உல்லாசப் பயணமாகச் சென்றான். தேரை ஒரு அழகிய காட்டின் வழியே தேரோட்டி ஓட்டிச் சென்றான். வீரசேனன் அங்குள்ள அழகிய காட்சிகளை ரசித்தவாறே தன் நண்பனுடன் வேடிக்கையாகப் பேசியவாறே சென்று கொண்டிருந்தான்.

அப்போது அவர்கள் வழியில் ஒரு யானைக் கூட்டம் வந்தது. யானைகள் பிளிறும் சத்தம் கேட்டு தேர்க்குதிரைகள் மிரண்டு ஓடி ஒரு மரத்தில் தேரை மோதச் செய்தன. தேரிலிருந்தவர்கள் தூக்கி எறியப்பட்டார்கள். தேரோட்டியும் வீரசேனனின் நண்பனும் ஒரு புதரில் விழுந்தார்கள். வீரசேனனோ அதற்கு அப்பால் இருந்த ஒரு குளத்தில் போய் விழுந்தான். குதிரைகள் பயந்து எங்கோ ஓடி விட்டன.

வீரசேனன் சிரமப்பட்டு நீந்தி அக்குளத்தின் கரைக்கு வந்தான். அங்கிருந்து அவன தன் நண்பனும் தேரோட்டியும் விழுந்து கிடந்த இடத்திற்கு வந்தான். அவர்களும் எழுந்து நின்று வீரசேனனைக் கண்டு ஆச்சரியத்தால் ஆவென்று கூவினார்கள்.

அவர்கள் ஏன் அவ்வாறு கூவினார்கள் என்பதற்கான காரணம் வீரசேனனுக்குத் தெரியவில்லை. எனவே அவர்களிடம் அவன் "நீங்கள் எதைக்கண்டு ஆச்சரியப்பட்டு இப்படிக் கூவுகிறீர்கள்?" என்று கேட்டான். அவர்களோ அதற்கு

உடனே பதில் சொல்லாமல் தயங்கி நின்றார்கள்.

அப்போது வீரசேனன் "ஏன் தயங்குகிறீர்கள்? அப்படி என்ன அதிசயம் நிகழ்ந்துவிட்டது?" என்று கேட்டான். அப்போதும் அவர்கள் எந்த பதிலையும் கூறாமல் நின்றார்கள்.

வீரசேனனும் அவர்கள் தன்னையே உற்று உற்றுப் பார்ப்பதைக் கண்டான். அவர்கள் ஏன் அப்படிப் பார்க்க வேண்டும் என நினைத்து அவன் தன் உடலைப் பார்த்துக் கொண்டான். அவனுக்கே அப்போது ஆச்சரியம் ஏற்பட்டது. ஏனெனில் அவன் தான் அணிந்திருப்பது இளவரசனின் உடைகளாக இராமல் புடவையும் ரவிக்கையும் அணிந்திருப்பதையும் கைகளில் வளையல்களும் கால்களில் கொலுசுகளும் இருப்பதைக் கண்டான். அது மட்டுமல்ல அவனது கைகளும் கால்களும் மிருதுவாக ஒரு பெண்ணினுடையது போல இருப்பதை உணர்ந்தான்.

அப்போது தான் அவனுக்குத் தான் ஒரு பெண்ணாக மாறிவிட்டது தெரிந்தது. அது அநேகமாகக் குளத்தில் விழுந்த பிறகுதான் ஏற்பட்டிருக்கிறது என்றும் ஊகித்துக் கொண்டான். தான் மீண்டும் எப்படி ஆணாவது என்பது அவனுக்குத் தெரியவில்லை.

அவன் தன் நண்பனையும் தேரோட்டியையும் அழைத்துக் கொண்டு நடந்து அரண்மனைக்கு வந்து சேர்ந்தான். தன் தந்தையிடம் அவன் காட்டில் நடந்ததைக் கூறவே





கதியைக் கண்டு துயரக் கடலில் ஆழ்ந்தான். இளவரசன் பெண்ணாக மாறிவிட்ட சமாசாரம் நாடெங்கிலும் பரவிவிட்டது. வீரசேனனும் வெளியே போக வெட்கப்பட்டுக் கொண்டு அரண்மனைக்குள்ளேயே இருந்தான்.

வீரசேனன் உருவத்தில் தான் பெண்ணாக இருந்தானேயொழிய அவனது உள்ள உணர்ச்சிகளெல்லாம் ஒரு ஆணினுடையதாகவே இருந்தன. ஆனால் அவற்றை வெளியே காட்ட முடியாமல் அவன் திக்குமுக்காடி திணறினான். தன் விதியை நொந்து கொண்டு அவன் காலம் கழிக்கலானான்.

விஜயசேனனும் உடனேதான் அடிக்கடி கலந்து ஆலோசிக்கும் மந்திரவாதியை அழைத்தான்.

மந்திரவாதியும் இளவரசனை விசாரித்து எல்லாம் விவரமாகத் தெரிந்து கொண்டு "அரசே! இளவரசர் விழுந்தது மந்திரக்குளம். அக்குளத்தில் ஆண் விழுந்தால் பெண்ணாகவும் பெண் விழுந்தால் ஆணாகவும் மாறிப் போக வேண்டும் என்று அதை உருவாக்கிய ஒரு யட்சன் சாபம் கொடுத்தான். அதனால்தான் அந்தக் குளத்தில் விழுந்த இளவரசர் பெண்ணாக மாறிவிட்டார். இதனைப் போக்க மாற்றே கிடையாது. எல்லாம் விதியின் விளையாட்டு" எனக் கூறினான்.

மன்னனும் தன் மகனுக்கு நேர்ந்த

விஜயசேனன் அங்க நாட்டு மன்னனுக்குத் தன் மகனுக்கு ஏற்பட்ட உருவ மாற்றத்தை விவரமாக எழுதி வீரசேனன் இனி அமிர்தவல்லியை மணக்க முடியாத நிலையில் இருப்பதால் அவளுக்கு வேறொரு அரசகுமாரனைத் தேர்ந்தெடுத்து மணம் செய்துவைக்குமாறு வேண்டிக் கொண்டான்.

எல்லா விவரங்களையும் அறிந்து கொண்ட அமிர்தவல்லி வீரசேனனுக்கு ஒரு கடிதம் எழுதினாள். அதில் 'நாம் இருவரும் ஒருவரை ஒருவர் உயிருக்கு உயிராக நேசித்தோம். விதி வசத்தால் தாங்கள் மாயக்குளத்தில் விழுந்து பெண் உருவம் பெற்றுவிட்டீர்கள். நான் தங்களை எப்படி மறக்க முடியும்?

எனவே நான் அந்த மாயக்குளத்திற்குப் போய் அதில் விழுந்து ஆண் உருவம் பெற்று வருகிறேன். யட்சனின் சாபப்படி அது கண்டிப்பாக நிகழும். அதன்பிறகு நாம் இருவரும் திருமணம் செய்து கொள்ளலாம். இதனால் நம் விருப்பமும் நம் பெற்றோர்களின் விருப்பமும் நிறைவேறும்'' என எழுதப்பட்டிருந்தது.

கடிதத்தைப் படித்த வீரசேனன் ஒரு பெருமூச்சு விட்டான். அக்கடிதத்தை அவன் தன் தாய் தந்தையாரிடம் கொடுத்தான். அவர்களும் அதைப் படித்துவிட்டு ''இதிலிருந்து அமிர்தவல்லி உன்னையே எவ்வளவு நேசிக்கிறாள் என்பது தெரிகிறது. இதுபற்றி நீ என்ன நினைக்கிறாய்?'' என்று கேட்டார்கள்.

அப்போது பெண்ணாக மாறி இருந்த வீரசேனன் சற்று யோசித்துவிட்டு ''அமிர்தவல்லி கூறுவது போல நடப்பது சரியல்ல என்று நான் நினைக்கிறேன். நான் இந்த ஏற்பாட்டிற்குச் சம்மதித்தால் மேலும் பல சிக்கல்கள் உருவாகி விடும். அவள் தனக்குப் பிடித்தமான வேறொரு அரசகுமாரனை மணந்து கொள்வதே நல்லது. இதையே ஒரு கடிதத்தில் எழுதி அவளுக்கு என் பதிலாக அனுப்புகிறேன்'' என்றான்.

அதைக்கேட்ட அவனது தாய் தந்தையர் திகைத்துப் போயினர். அமிர்தவல்லி கூறிய யோசனைப்



படி நடந்தால் இருவரும் மணம் புரிந்து கொண்டு அவர்கள் சுகமாக வாழலாமே என நினைத்தார்கள். அதை அவர்கள் தம் மகனிடமும் கூறிப் பார்த்தார்கள். ஆனால் வீரசேனனோ அது ஏற்கக்கூடிய யோசனை அல்ல எனறு கூறி ஒரேயடியாக மறுத்துவிட்டான்.

வேதாளம் இக்கதையைக் கூறி ''மன்னனே! வீரசேனன் இப்படி முடிவு எடுத்தது சரியா? ஆணாக அமிர்தவல்லி மாறிவிட்டால் பெண்ணாக உள்ள தான் அவளுக்கு அடங்கிப் போக வேண்டுமே என நினைத்து அவளது திட்டத்தை ஏற்க மறுத்தானா? ஒரு வேளை அவன் அவளை விரும்பாமல் தான் வேறு ஒரு அரசகுமாரனை அவள் மணந்து

கொள்ளலாம் என்று எழுதினானோ? அல்லது தான் அப்போது உள்ள நிலையில் அமிர்தவல்லி தன்னை மணக்க விரும்ப மாட்டாளோ என வீரசேனன் நினைத்தானா? அப்படியானால் அமிர்தவல்லி அவள் விரும்புபவனயே மணந்து கொள்ளட்டும் என எண்ணி அவ்வாறு கூறினானா? அல்லது அமிர்தவல்லி ஆணாகித்தான் பெண்ணாகவே இருந்தால் அவள் மன்னன் என்ற பெயர்பெற்று ஆட்சி புரிவாள். தான் ராணி என்ற பெயரோடு ஆட்சி புரிய முடியாமல் அவளருகே பேசாமல் உட்கார்ந்திருக்க வேண்டுமே என்ற காரணமா? இவற்றில் எது சரி? இக்கேள்விகளுக்கு எல்லாம் விடை தெரிந்தும் நீ கூறாவிட்டால் உன் தலை வெடித்துச் சுக்கு நூறாகி விடும்'' என்றது.

விக்கிரமனும் ''வீரசேனன் தன் உணர்ச்சியையே முக்கியமாகக் கருதாமல் பிறர் உணர்ச்சியும் எவ்வாறு இருக்கும் எனப் புரிந்து கொண்டவன். ஆணாக இருந்த தான் பெண்ணாக மாறியும் தன் மனதில் ஆணின் உணர்ச்சிகளே எழுவதையும் அதனால் தான் படும் வேதனையையும் உணர்ந்தவன். எனவே அமிர்தவல்லி ஆணாக மாறினாலும் அவளது உள்ள உணர்ச்சிகள் ஒரு பெண்ணினுடையதாகத்தான் இருக்கும் என்றும் அதனால் அவள் எவ்வளவு வேதனைப்படுவாள் என்றும் நினைத்துப் பார்த்தான். அவள் கூறியபடி நடந்து திருமணமும் நடந்துவிட்டால் இருவர் மனங்களும் வேதனைப் பட்டுக் கொண்டே இருக்கும். அமிர்தவல்லியும் வேதனைப்படக் கூடாதே என்பதற்காகவே வீரசேனன் அத் திருமணத்திற்குச் சம்மதிக்கவில்லை. இப்படி அவன் முடிவு செய்தது சரியே'' என்றான்.

விக்கிரமனின் சரியான இந்த பதிலால் அவனது மௌனம் கலையவே அவன் சுமந்து வந்த உடலோடு வேதாளம் உயரக்கிளம்பி மீண்டும் முருங்க மரத்தில் ஏறிக் கொண்டது.






பூவூர் ஜமீன்தாரர் பூர்ணலிங்கம் ஒவ்வொரு ஆண்டின் ஆரம்பத்தில் கவியரங்கம் நடத்திக் கவிஞர்களை கௌரவிப்பது வழக்கம். அக்கவியரங்கத்தில் கவிஞர்களுடன் அவர்களது புதல்வர்களும் வருவார்கள். அச்சிறுவர்களும் கவிதை புனைந்து வாசித்துக் காட்டி கூடி இருந்தவர்களை மகிழ்விப்பார்கள்.

ஒரு ஆண்டில் நடந்த கவியரங்கத்தில் மூன்று பாலகவிஞர்கள் எல்லோர் கவனத்தையும் கவர்ந்தனர். ஜமீன்தாரரும் "இவர்கள் கவிஞர்களின் புதல்வர்களல்லவா! அதனால் தந்தை வம்ச வழியாக இத்திறமை இவர்களுக்கும் வந்திருக்கிறது" எனக் கூறிப் பாராட்டினார்.

அங்கு கூடி இருந்த பிரமுகர்களும் ஜமீன்தாரர் கூறுவதைக் கேட்டுவிட்டு "ஆமாம். தாங்கள் கூறுவது சரிதான். இந்த இளம் வயதிலேயே இவ்வளவு திறமை பெற்ற இவர்கள் பிற்காலத்தில் மாபெரும் கவிஞர்களாகத் திகழப் போகிறார்கள்" என்று ஒத்து ஊதினார்கள்.

அதைக் கேட்ட ஜமீன்தாரர் மகிழ்ந்து போனார். ஆனால் எல்லோரும் அச்சிறுவர்களைப் பாராட்டிய போதிலும் தம் திவான் மட்டும் எதுவும் கூறாதிருப்பதை அவர் கவனித்தார். அதனால் அவர் தம் திவானிடம் "இவர்களைப் பற்றி உங்கள் அபிப்பிராயம் என்ன?" என்று கேட்டார்.

அப்போது திவான் "இவர்கள் தம் தந்தையரிடம் கேட்டதைக் கிளிப்பிள்ளை போலச் சொல்கிறார்களேயொழிய சொந்தக் கற்பனை எதுவும் இல்லை. கவிதை புனையப் படித்தால்தான் வரும் என்பது இல்லை. தானாகவே கவிஞனின் உள்ளத்திலிருந்து எழ வேண்டும்.

—வெ. லாவண்யா—

இவர்கள் தம் வீட்டில் கேட்டதையே சொல்கிறபடியால் எதிர்காலத்தில் இவர்கள் கவிஞர்களாகப் பெயர் பெறுவார்கள் என்று உறுதியாகக் கூறமுடியாது'' என்றார்.

அப்போது ஜமீன்தாரர் ''இவர்கள் பிற்காலத்தில் கவிஞர்களாக விளங்குவார்களா என்பதை நாம் அறிய இவர்களுக்கு ஒரு பரீட்சை வைக்கிறேன்'' என்றார்.

இதற்கு இரண்டு மாதங்களுக்குப் பின் ஜமீன்தாரர் ஒரு நாளிரவு விருந்திற்கு ஏற்பாடு செய்து அதற்குத் தம் உறவினர்களையும், பிரமுகர்களையும் கவிஞர்களையும் கவிஅரங்கத்தில் யாவர் கவனத்தையும் ஈர்த்த மூன்று பால கவிஞர்களையும் அழைத்தார். விருந்து அவரது தோட்டத்தில் நடந்தது.

விருந்து முடியும் போது வானில் பிறைச் சந்திரன் இருளைப் போக்கிய வாறு வந்தான். அப்போது ஜமீன்தாரர் பாலகவிஞர்களைத் தம் அருகே அழைத்து ''அந்தப் பிறைச் சந்திரனைக் காணும்போது உங்கள் மனதில் என்ன தோன்றுகிறது?'' என்று கேட்டார்.

ஒரு பாலகவி ''சிவனார் முடி மீதுள்ள பிறைச் சந்திரன் எட்டிப் பார்த்துக் கொண்டிருக்கிறான்'' என்றான். மற்றொரு பாலகவிஞனோ ''தாங்கள் ஏற்பாடு செய்துள்ள இந்த விருந்தின் விளக்குகளுக்குத் தன் ஒளியில் பாதியைத் தந்துவிட்டு மீதிப் பாதியுடன் பிரகாசித்துக் கொண்டிருக்கிறான்'' என்றான்.

மூன்றாவது பாலகவிஞனை ஜமீன்தாரர் பார்க்கவே அவனும் ''நான் பாலகவிதானே. அதனால் இந்தப் பிறைச்சந்திரன் என் கண்களுக்கு பிழிந்தபின் இருக்கும் எலுமிச்சப்பழத் தோல் போலத் தோன்றுகிறான்'' என்றான்.

அதுகேட்டு ஜமீந்தாரர் மிகவும் மகிழ்ந்து ''சபாஷ்! நீதான் உண்மையான கவிஞன். பிற்காலத்தில் நீ பேரும் புகழுமாய் வாழ்வாய்'' என்றார்.



# அம்புலிமாமா அனுபந்தம்—44



நம் நாட்டுப் பறவைகளும், மிருகங்களும்:

## காண்டா மிருகம்

இந்தியா, இந்தோனேசியா, ஆப்பிரிக்காவின் சில பகுதிகளில் மட்டுமே காண்டாமிருகம் உள்ளது. இவை ஐந்து வகைப்படுபவை. ஆப்பிரிக்காவில் உள்ள காண்டா மிருகம் கருப்பும் வெளுப்புமாக உள்ளது. ஜாவா, சுமத்ரா தீவுகளில் காணப்படும் காண்டா மிருகங்கள் நம் நாட்டு கிரேட் ரெயினாசரஸ் வகையைச் சேர்ந்தவை. நம் நாட்டிலுள்ள காண்டா மிருகங்கள் மிகப் பெரியவை.

பார்ப்பதற்குக் காண்டா மிருகம் மிகவும் விகாரமாக இருக்கும். இதன் மூக்கின் மீது கொம்பு போல இருப்பது தென்படும். அது எலும்பைக் கொண்டது அல்ல. மூக்குப் பகுதியில் ரோமங்கள் அடர்ந்து வளர்ந்து ஒன்று சேர்ந்து இறுகிக் கொம்பு போலத் தென்படுகிறது. இதன் காதைச் சுற்றியும் வாலைச் சுற்றியும் ரோமங்கள் வளர்கின்றன. சில சமயம் இவை 180 செ. மீ. நீளமும் வளர்பவை.

காண்டா மிருகத்தின் கொம்பு ஒருவகை மருந்து எனக் கூறிச் சிலர் அவற்றை வேட்டையாடிக் கொன்று வருகிறார்கள். இதனால் இவற்றின் எண்ணிக்கை நாளுக்கு நாள் குறைந்து கொண்டே போகிறது. இவை மேலும் அழிந்து விடாமல் பாதுகாக்க நம் அரசு பல சரணாலயங்களை அமைத்துள்ளது. அஸ்ஸாமில் கஜிரங், ஜல்த்பாரா, கோகுமார் சோனாய் ரூபாய் சரணாலயங்கள் குறிப்பிடத்தக்கவை. காண்டா மிருகம் கற்காலத்திற்கும் முந்தியதாகக் கருதப்படுகிறது.



# இளம் சிறுமி இசை இயக்குனர்!

மேற்கு கோதாவரி மாவட்டத்தின் ஒரு ஊரிலிருந்து ஐந்து வயதான சிறுமி தன் துணிகளைச் சுருட்டி எடுத்துக்கொண்டு தன் தாய் தந்தையரிடம் சொல்லிக் கொள்ளாமல் சென்னைக்கு ஓடி வந்துவிட்டாள். தனக்குப் பிடித்தமான பாடகர்களையும் பாடகிகளையும் பார்க்க விடாமல் தன் பெற்றோர்கள் தடுக்கிறார்கள் என்று அவள் நினைத்ததே அதற்குக் காரணம்.

இது ஏழு வருடங்களுக்கு முன் நிகழ்ந்தது. இப்போது அந்தச் சிறுமி பிரபல திரைப்படப் பாடகி சித்ராவின் தெலுங்குப் பாட்டு ஒன்றுக்கு இசை அமைத்துள்ளாள். இப்போது அச்சிறுமியின் வயது பனிரெண்டு. அவள்தான் ஸ்ரீலேகா.

ஐந்து வயதுக் குழந்தையாக ஓடி வந்த ஸ்ரீலேகாவைக் காவல் துறையினர் பிடித்து அவளது பெற்றோர்களிடம் ஒப்படைத்தார்கள். இச்சிறுமியின் பெற்றோர்கள் இவள் இசையில் கொண்டுள்ள ஆர்வத்தைக் கண்டு அதை எப்படி வளர்ப்பது எனத் திகைத்தபோது அவர்களது உறவினரான மரகதமணி அந்தப் பொறுப்பை ஏற்றார். அவர் திரைப்பட இசை அமைப்பாளர். அவர் ஸ்ரீலேகாவுக்கு. முறைப்படி சங்கீதமும் கற்றுக் கொடுத்து மெல்லிசைப் பாடல்கள், நாட்டுப் பாடல்கள், பாமாலை, நாட்டு இசை ஆகியவற்றையும் பயில்வித்தார்.

இசையில் ஆர்வம் கொண்ட ஸ்ரீலேகா பள்ளிக்குப் போகாமல் இரவும் பகலும் இசையிலேயே கவனம் செலுத்தினாள். இப்படி இரண்டு ஆண்டுகள் இசை பயின்றும் திரைப்படங்களைப் பார்த்தும், திரைப்பட இசைத்தட்டுக்களை கேட்டும் நல்ல தேர்ச்சி பெற்றாள். மரகதமணியும் அவளை அவ்வப்போது பாடல்களை ஒலிப்பதிவு செய்யும்போது தம்மோடு அழைத்துச் சென்று வந்தார்.

ஒருநாள் மரகதமணி ஸ்ரீலேகாவைச் 'ஆர்க்கெஸ்ட்ரா'வில் உட்கார வைத்தார். அப்போது அவள் அந்த மெட்டை மிக எளிதாக ஹார்மோனியத்தில் வாசித்துக் காட்டவே அது கேட்டு யாவரும் பிரமித்துப் போனார்கள். ஒரு தமிழ் பாடலுக்கு மூன்றே நிமிடத்தில் இசை அமைத்துக் கொடுத்து எல்லோரையும் இவள் அயர வைத்தாள்!

இவளது இசையைக் கேட்டுப் பாராட்டாதவர் யாருமே இல்லை. இவ்வளவு சிறிய வயதில் இப்படிப் புகழ்பெற்றவள் கண்டிப்பாக கின்னஸ் புத்தகத்தில் இடம் பெற்று விடுவாள் என்பதில் சந்தேகமே இல்லை.

இவள் இப்போது தன் பெயரை மணிமேகலை என மாற்றிக்கொண்டு இசை இயக்குனராகத் திரைப்பட உலகில் உள்ளாள். தெய்வ பக்தி கொண்ட இவளுக்கு நல்ல எதிர்காலம் உள்ளது.

# உங்களுக்குத் தெரியுமா?

1. கேரளத்தில் புத்தாண்டு ஆரம்ப நாளை 'விஷு' என்கிறார்கள். இதே நாளை நம் நாட்டில் வடகிழக்கு மாநிலம் ஒன்றிலும் புத்தாண்டு ஆரம்ப நாளாகக் கொண்டாடுகிறார்கள். அந்த மாநிலம் எது? அந்நாளுக்கு என்ன பெயர்?
2. மே தினத்தன்று கிருஸ்துவ மதப் பிரபலப் பிரசாரகரின் நாளும் வருகிறது. அந்தப் பிரசாரகர் யார்?
3. ஜோகேபாள நகரம் உலகப் புகழ் பெற்ற இரு பெயர்களை நினைவூட்டுகிறது? அப்பெயர்கள் யாவை?
4. எண்ணெய் தடவிய தேங்காயை ஒரு விளையாட்டில் பயன்படுத்துகிறார்கள். அந்த விளையாட்டு எது?
5. சந்திரகுப்த மௌரியர் எவ்வளவு காலம் ஆண்டார்? அவருக்குப் பின் வந்த அவரது மகன் யார்? அவர் எவ்வளவு காலம் ஆண்டார்?
6. ரஷ்ய மொழியின் எழுத்து எது?
7. மத்திய மந்திரி சபையில் முதன்முதலாக மந்திரியாக இருந்த அரச குடும்பப் பெண்மணி யார்?
8. சண்டிகடில் 'ராக் கார்டனை அமைத்தவர் யார்?
9. ஜெயதேவரின் பாடல்களை 'கிரந்த சாகிப்'பில் சேர்த்த சீக்கிய குரு யார்?
10. வீடுகளில் ஏன் துளசிச் செடியை வைத்து வணங்குகிறார்கள்?
11. கல்கத்தாவிலிருந்து நாடாளுமன்றத்திற்குத் தேர்ந்தெடுக்கப்பட்ட கட்சி சார்பற்ற தலைவர் யார்?
12. கார்ல் லூயியின் நீண்ட 100 மீட்டர் சாதனையை முறியடித்தவர் யார்?
13. நெப்போலியன் 1804ல் சக்கரவர்த்தியான அதே ஆண்டில் நடந்த மற்றொரு முக்கிய நிகழ்ச்சி யாது?

## விடைகள்

1. அஸ்ஸாம், சிஹேறர்.
2. செண்ட் ஜோசப்.
3. அலெக்சாண்டரையும் அவர் தன் குதிரையின் நினைவாக அந்நகரைக் கட்டியதையும்.
4. யூவிலாக்சி-மணிப்பூர்.
5. 24 ஆண்டுகள். பிம்பசாரர் 25 ஆண்டுகள்.
6. சிரிலெக்.
7. ராஜகுமாரி அமிருத் கௌர்.
8. நேக்சந்த்.
9. குரு அர்ஜுன் சிங்.
10. ஐஸ்வரியத்தை அளிக்கும் என்ற நம்பிக்கை.
11. மேகநாத் சாஹா.
12. லெநாய் பியுலெச்.
13. முதல் நீராவி இயந்திரத்தை பிரடரிக் ஓட்டிக் காட்டியது.

# அம்புலிமாமா செய்திகள்

## கைக்குள் அடங்கும் கம்ப்யூட்டர்



உள்ளங்கைக்குள் அடங்கும் அளவிற்குச் சிறிய கம்ப்யூடர்களை உருவாக்கியுள்ளார்கள். பெர்சனல் கம்ப்யூடர் என்ற மைக்ரோ கம்ப்யூடரை விட சிறியது. சரியாகச் சொல்வதானால் இது ட்ரிலியனில் 'ஒரு பங்கு'. இதை பிகோ கம்ப்யூடர் என்பர். இனி கம்ப்யூடர்கள் கைக் கடியாரம் போலவும் பேனா போலவும் வருவதை விரைவில் எதிர்பார்க்கலாம்.

## மிக வேகமான ரயில்



ஜப்பானின் வடமேற்குப் பகுதியில் ஓடும் ஹீகான் சென் எக்ஸ்பிரஸ் ரயில் வண்டி மணிக்கு 345 கி.மீ. வேகத்தில் செல்லக் கூடிய விதத்தில் தயாரிக்கப்பட்டுள்ளது. ஜோமோகௌகன், தராவா நிலையங்களுக்கு இடையே சுரங்கப்பாதையில் இது வெள்ளோட்டம் விடப்பட்டது. சென்ற மார்ச் மாதம் இதே ரயில் மணிக்கு 336 கி.மீ. வேகத்தில் சென்றது ஆனால் உலகிலேயே மிக வேகமாகச் செல்லும் ரயில் என 1990 மே மாதத்தில் பிரான்ஸின் டி.ஜி.வி. எக்ஸ்பிரஸ் சாதனை புரிந்தது. இதன் வேகம் மணிக்கு 513 கி.மீ.

## மிகப் பழைய புதை பொருள்கள்



சுமார் 150 ஆண்டுகளுக்கு முன ஸ்காட்லாண்டில் பூமிக்குள்ளிருந்த தொல்பொருள் ஆராய்ச்சியாளர்களால் தோண்டி எடுக்கப்பட்ட இவை 3700 லட்சம் ஆண்டுகளுக்கு முன் வாழ்ந்த ஜீவ ராசிகளின் எலும்புகளாக இருக்கலாம் என அவர்கள் கருதுகிறார்கள். அந்தப் பிராணி அநேகமாக ஒரு பெரிய பாம்பாகவோ அல்லது முதலையாகவோ இருக்கலாம் என்றும் அவர்கள் கருதுகிறார்கள். இதுவரை கிரீன்லாந்தில் கிடைத்த புதை பொருள்களே மிகப் பழமையானவையாகக் கருதப்பட்டன. ஆனால் இப்போது ஸ்காட்லாண்டில் கிடைத்தவையே மிகப் பழமையானது.



# பொறுமை வேண்டும்!

மருதூரில் மருதப்பர் என்ற பணக்காரர் இருந்தார். தம் கணக்கு வழக்குகளைக் கவனிக்க நம்பிக்கையான ஒருவனை நியமிக்க அவர் விரும்பினார். அதைக் கேள்விப்பட்ட அவரது நண்பர் நாச்சிமுத்து தன் மருமகன் குமரனைச் சிபாரிசுக் கடிதத்தோடு அனுப்பி வைத்தார். அவனும் தன் ஊரிலிருந்து படகில் ஏறி ஆற்றைக் கடந்து எதிர்க் கரையிலிருந்த மருதூரை அடைந்தான்.

மருதூரில் மருதப்பர் வீட்டை அடைந்த குமரன் அங்கு வாசலில் இருந்த வேலையாளிடம் தான் வந்திருப்பதை மருதப்பருக்குத் தெரிவிக்கும்படிக் கூறிவிட்டு அங்கேயே காத்திருந்தான். உள்ளே போன வேலையாள் மருதப்பரிடம் குமரன் வந்திருப்பதாகக் கூறவே அவரும் "நான் வெளியே போயிருப்பதாயும் எப்போது திரும்பி வருவேன் என்பது உனக்குத் தெரியாது என்றும் சொல்" என்று சொல்லி அனுப்பினார்.

வேலையாளும் தன் எஜமானர் வெளியே போயிருக்கிறார் என்று குமரனிடம் கூறினான். அவர் எப்போது வருவார் என்று குமரன் கேட்க அவன் அதுபற்றித் தனக்குத் தெரியாது எனக் கூறினான். அதற்குப் பின் பத்து நிமிடங்களுக்கு ஒருமுறை அந்த வேலையாளிடம் "உன் எஜமானர் வந்து விட்டாரா?" என்று கேட்க அவனும் இன்னமும் வரவில்லை என்று கூறிக்கொண்டே வந்தான். இப்படியாக ஒரு மணி நேரம் கழிந்தது.

அப்போது குமரன் பொறுமை இழந்தவனாய் வேலையாளிடம் "உன் எஜமானர் வர வெகு நேரமாகும் போலிருக்கிறது. அவர் வந்ததும் அக்கரை நாச்சியப்பர் அனுப்பி

—சத்தியா கிருஷ்ணன்—



யவர் வந்து போனார் என்று தெரிவி" என்று சொல்லிவிட்டுப் படகுத் துறைக்குச் சென்றான்.

அங்கு ஒரே கூட்டமாக இருந்தது. படகு இருந்தும் அதில் யாரும் ஏறவில்லை. எல்லோரும் "படகோட்டியைக் காணவில்லையே" என்று கூறி நின்று கொண்டிருந்தார்கள். குமரனும் அவர்களோடு சேர்ந்து நின்றான். ஒரு மணிநேரம் கழிந்தும் படகோட்டி வரவில்லை.

கொஞ்ச நேரத்திற்குப் பின் குமரன் "எல்லோரும் பேசாமல் நிற்கிறீர்களே? யாராவது போய்ப் படகோட்டியை அழைத்து வரக் கூடாதா?" என்று கேட்டான். அதற்கு யாரும் பதில் சொல்லவில்லை, இருந்த இடத்தை விட்டு அசையவும் இல்லை.

சற்று நேரத்திற்குப் பின் குமரன் "என்னால் காத்திருக்க முடியாது. நான் போய் படகோட்டியைத் தேடிப் பிடித்து அழைத்து வருகிறேன்" எனக் கூறிவிட்டுக் கிளம்பினான். அவன் அரை மணி நேரம் அலைந்து விசாரித்து ஒரு வழியாகப் படகோட்டியின் வீட்டை கண்டுபிடித்து விட்டான். அங்கு விசாரித்ததில் படகோட்டி அப்போதுதான் படகுத் துறைக்குப் போனான் என்பது தெரிந்தது. காலையிலிருந்து அவனுக்கு வயிற்று வலி இருந்ததால்தான் தாமதமாயிற்றாம்.

குமரன் உடனே படகுத்துறைக்குச் சென்றான். அதற்குள் படகு அங்கிருந்த மற்றவர்களை ஏற்றிக் கொண்டு போய் விட்டது அது நடு ஆற்றில் போவதை கண்டு திகைத்து நின்றான். அப்போது அவனருகே இருந்த ஒருவர் "ஏன் திகைத்து விட்டாய்? படகு போய் விட்டுத் திரும்பி வர இரண்டு மணி நேரமாகும். அதுவரை பொறுமையாக இருக்க வேண்டியதுதான்" என்றார்.

குமரனும் "என்ன பொறுமை வேண்டிக் கிடக்கிறது! இன்று ஒரு வேலையும் ஆகவில்லை. சரி பேச்சுத் துணைக்கு நீங்கள் கிடைத்தீர்கள். படகு வரும்வரை பேசலாம். நீங்கள் யாரோ?" என்று கேட்டான்.

அவரும் சிரித்துக் கொண்டே "ஏன் இப்படி அலுத்துக் கொள்கிறாய்? அப்படி என்ன நடந்து விட்டது இன்று உனக்கு? இந்தப் படகைத் தவற விட்டதால் உணர்ச்சி வசப்பட்டு விட்டாயா?" என்று கேட்டார்.

குமரனும் "இது மட்டும் அல்ல. இன்று இவ்வூரில் மருதப்பர் என்ற பெரிய மனிதரைப் பார்க்க அவரது நண்பர் நாச்சியப்பர் கொடுத்த கடிதத்தோடு போயிருந்தேன். அவர் நான் போன போது வீட்டில் இல்லை. எங்கோ போயிருக்கிறாராம். எப்போது வருவார் என்பதும் யாருக்கும் தெரியாதாம். நானும் ஒரு மணி நேரம் பொறுமையாகக் காத்திருந்து பார்த்தேன். அவர் வராததால் பொறுமை இழந்து இங்கே வந்தால் இங்கேயும் எனக்குச் சோதனை!" என்றான் சற்றுக் கடுப்புடன்.

அந்தப் பெரியவரும் அதைக் கேட்டுச் சிரித்தார். குமரனோ "ஏன் சிரிக்கிறீர்கள்? என்னைப் பார்த்தால் சிரிக்கவா தோன்றுகிறது?" என்று கேட்டான்.

அவரும் புன்னகை புரிந்தவாறே "நான்தான் மருதப்பன். என்னைக் காண நீ வந்து மேலும் கொஞ்ச நேரம் காத்திருக்கப் பொறுமை இல்லாமல் வந்து விட்டாய். உன்னைக் காக்க வைத்தது உன்னைப் பரீட்சிக்கவே. இப்போது பார்! வேறு வழி இல்லாமல் படகுக்காக நீ பொறுமையுடன் காத்திருக்க வேண்டி இருக்கிறது. இது போல எந்த வேலையும் ஆக வேண்டும் என்றால் பொறுமை வேண்டும்" என்றார்.

குமரனும் அவரை வணங்கி இன்று சரியான பாடம் கற்றுக் கொண்டேன். இனி எந்த வேலையிலும் பொறுமையைக் கடைப் பிடிப்பேன்" என்றான்.

மருதப்பரும் அவனைத் தட்டிக் கொடுத்தவாறே "சபாஷ்! உனக்கு வேலை தருகிறேன்" என்றார்.



# கணக்கு பார்!

வை வையாபுரி லட்சக்கணக்கில் வியாபாரம் செய்பவன். அவனது நண்பன் குப்புசாமி. ஏழை விவசாயியான அவன் மகன் சேகரனை வையாபுரி பணம் கொடுத்துப் பத்தாவது வரை படிக்க வைத்தான். சேகரனும் பொதுத் தேர்வில் நல்ல மதிப்பெண்கள் பெற்றான்.

அப்போது குப்புசாமி தன் மகனுக்கு அவனது கடைகளில் ஏதாவது ஒன்றில் ஒரு வேலை போட்டுக் கொடுக்கும்படி வையாபுரியிடம் வேண்டினான். வையாபுரியும் சேகரனை அழைத்து "நீ கணக்கில் எவ்வளவு மதிப்பெண்கள் பெற்றிருக்கிறாய்?" என்று கேட்டான். சேகரனும் "நூற்றுக்கு தொண்ணூற்று ஒன்பது" என்றான்.

வையாபுரியும் "கணக்கில் நூற்றுக்கு ஒன்று குறைந்தது போல் நீ பார்க்கப் போகும் கணக்கு வேலையில் நூற்றுக்கு ஒன்று குறைந்தால் ஒன்று நஷ்டம். ஆயிரத்திற்கு பத்து, பத்தாயிரத்திற்கு நூறு, லட்சத்திற்கு ஆயிரம் என நஷ்டம் வரும். நான் பல லட்சங்களில் வியாபாரம் செய்பவன். எனவே உன்னை வேலைக்கு வைத்துக் கொண்டால் எனக்குப் பெருத்த நஷ்டமே ஏற்படும். எனவே நீ அரசாங்க பொதுப்பணித் தேர்வு எழுதி அரசாங்க வேலையில் சேர்" என்றான்.

சேகரனும் அவ்வாறே செய்து அரசாங்க வேலையில் சேர்ந்து விட்டான். அப்போது குப்புசாமி வையாபுரியிடம் "என் மகன் அரசாங்க வேலையில் சேர்ந்து விட்டதால் அரசாங்கத்திற்கு நீ கூறியது போல நஷ்டம் ஏற்படாதா?" என்று கேட்டான்.

வையாபுரியும் "அட பைத்தியமே! அரசாங்க வேலை நிலையானது. என் வேலை அப்படியல்ல. எனக்கு நஷ்டம் ஏற்பட்டால் உன் மகனுக்கு வேலை இராது. எனவே அரசாங்க வேலையால் அவனுக்கு லாபமே. சேகரன் புத்திசாலி. அதனால்தான் அவனைப் பொதுப்பணி தேர்வு எழுதச் சொன்னேன்" என்றான் சிரித்துக் கொண்டே.







# உன்னை அறிந்தால்!

முத்தைய்யன் தாய் தந்தையரை இழந்த அனாதை. அவன் கூச்சப் படுவதனால் ஊரார் அவனிடம் வேலை வாங்கிக் கொண்டு அதற்கு ஏற்ற கூலி கொடுக்கமாட் டார்கள். அவனும் வாய் திறந்து அதிகக் கூலி கொடு என்று கேட்க வும் மாட்டான்.

முத்தைய்யனுக்குப் பணம் காசு என்று இல்லாது போனாலும் அழகு இருந்தது. அதனால் அவ்வூரி லுள்ள கந்தப்பனின் மகள் மரகதம் அவனை விரும்பினாள். ஒருநாள் அவனைக் கண்டு அவள்தான் அவனை மணக்க விரும்புவதாக வும் கூறினாள்.

முத்தைய்யன் வெட்கப்பட்ட வாறே "எனக்குக் கல்யாணமா? என்னை நீ மணந்து கொள்ளப் போகிறாயா? வேடிக்கையாக இருக் கிறதே" என்றான். மரகதமோ "வேடிக்கை இல்லை. உண்மை தான். உன்னைத்தான் நான் கல் யாணம் செய்து கொள்ளப் போவ தாக முடிவு செய்து விட்டேன்" என்றாள்.

குமரனோ "இதுபற்றி நாலு பேரிடம் கேட்டு யோசித்துச் சொல் கிறேன்" என்றான். மரகதமோ "உன் இஷ்டப்படி கேட்க வேண்டிய வர்களிடம் கேள். ஆனால் பதில் மட்டும் என்னை மணப்பதாக இருக்க வேண்டும்" என்றாள்.

அதைக்கேட்ட முத்தைய்யன் அது பற்றி சிலரிடம் யோசனை கேட் டான். அவர்களோ "ஐயோ! மரக தமா! மகா வாயாடி!! முரட்டு சுபா வம் கொண்டவள். பிடிவாதக்காரி. அவள் தன் தாய் தந்தையருக்கே அடங்குவது இல்லை. நீ அவளைக் கல்யாணம் செய்து கொண்டால் உன் பாடு திண்டாட்டம்தான்.

—பாபநாசம் சாமா—



நீயோ எதற்கும் கூச்சப்படுபவன் எதுவும் சொல்ல மு- யாமல் விழிப்பாய்'' என்றார்கள். அதனால் முத்தைய்யன் மரகதத்தை மணப்பது பற்றி மேலும் யோசிக்கவில்லை.

ஆனால் ஒருநாள் கந்தப்பன் முத்தைய்யனைக் கண்டு ''என் மகள் உன்னை தவிர வேறு யாரையும் கல்யாணம் செய்து கொள்ள மாட்டாளாம். நீயோ உதவாக்கரை. நாலு காசு சேர்த்துக் கொள்ளத் தெரியாதவன். அவள் உன்னை மணந்து கொண்டால் நீ அவள் கேட்பதை எல்லாம் வாங்கிக் கொடுக்க முடியாது. நீ இந்த ஊரை விட்டுப் போய்விடு. அப்போது அவள் உன்னை மறந்து விடுவாள். நானும் அவளுக்கு நல்ல வரனைத் தேர்ந்தெடுத்துக் கல்யாணம் செய்து வைக்க முடியும்'' என்றான்.

முத்தைய்யனும் அவன் சொன்னபடியே நடப்பதாகக் கூறி ஊரை விட்டு வெளியேறினான். அவன் ஒரு காட்டின் வழியே போகையில் ஒரு மரத்தடியே ஒரு யோகியைக் கண்டான். அவன் அவரை வணங்கித் தன்னைப் பற்றிக் கூறினான். அவரும் ''சரி, நீ என்னுடன் இருந்து எனக்குப் பணிவிடைகள் செய்'' எனவே அவனும் அவ்வாறே செய்யலானான். அந்த யோகி குமரன் எதற்கும் வெட்கப்படுபவன் என்பதைக் கண்டான். அவனைத் தன்னோடு வைத்துக் கொண்டு தன் வேலைகளை எல்லாம் செய்ய வைத்தார். குமரனும் அவர் சொன்ன வேலைகளை எல்லாம் செய்தான். இரண்டு வாரங்களானதும் அந்த யோகி ''நான் காசிக்குப் போகப் போகிறேன். நீ வேறு யோகியிடம் போய்ப் பணிவிடை செய்'' என்று கூறிவிட்டுக் கிளம்பினார்.

முத்தைய்யன் அப்படியே செய்வதாகக் கூறவே அவர் ''நீ இப்படி கூச்சப்பட்டால் எல்லோரும் உன்னிடம் வேலை வாங்கிக் கொண்டு ஏமாற்றுவார்கள். நான் உனக்கு சில அரிய சக்திகளைக் கொடுக்கிறேன். நீ அவற்றை உனக்காக உபயோகப்படுத்திக் கொள்ளாமல்

பிறருக்குப் பயன்படுத்த வேண்டும்'' எனக்கூறி அச்சக்திகளை அவனுக்கு அளித்து விட்டுச் சென்றுவிட்டார்.

முத்தையன் தன் பழைய ஊருக் குத் திரும்பலானான். வழியில் ஒரு ஊரில் ஒருவனிடம் தனக்கு ஏதா வது ஒரு வேலை கொடுக்குமாறு கேட்டான். அவனும் "வேலை கொடுக்கிறேன். என் வீட்டின் பின் புறம் உள்ள குட்டை நீரை இறைத்து வற்றடிக்க முடியுமா?'' என்று கேட்டான். "ஓ. ஒரே நொடியில் செய்கிறேன்'' என்று முத்தையன் கூறி வீட்டின் பின்புறம் போய் அக்குட்டை நீரைத் தன் கையில் எடுத்து தன் வாயில் விட்டுக் கொண்டான். மறுநிமிடம் குட்டை நீர் வற்றி நிலப்பரப்பு தெரிந்தது.

அந்த வீட்டுக்காரன் ஆச்சரியப் பட்டு "இதோ நம் வீட்டு கெம்பு வளையல் கிடைத்து விட்டது. நீ மிகவும் சக்தி வாய்ந்தவன். உன்னை நான் வேலைக்கு வைத்துக் கொள்ள முடியாது. இந்த வேலை நீ செய் ததே போதும்'' எனக்கூறி அனுப்பி விட்டான்.

அதற்குப் பிறகு முத்தையன் காசிலிங்கம் என்ற பணக்காரனி டம் போய் வேலைக் கேட்டான். அவன் மகாகஞ்சன். அவன் முத் தையனைக் கொண்டு தன் வீட்டு வேலைகளைச் செய்து கொண்டான். முத்தையன் எந்த வேலையை யும் நொடியில் முடிப்பது கண்டு காசிலிங்கம் ஆச்சரியப்பட்டான். அவன் முத்தையனை அவ்வூரா ருக்கும் வேலை செய்யச் சொல்லி அதற்கானப் பணத்தைத் தானே



வாங்கிக் கொண்டான். முத்தைய்யனுக்கு அரைவயிறு சாப்பாடுதான் கூலியாகப் போட்டான்.

முத்தைய்யன் தனக்குச் சம்பளமும் நல்ல ஆடைகளும் கொடுக்க வேண்டும் என்று காசிலிங்கத்திடம் கேட்டான். காசிலிங்கம் 'இதோ' 'அதோ' என்று சால்ஜாப்புக் கூறித் தட்டிக் கழித்துக் கொண்டு வரவே முத்தைய்யன் வேலையை விட்டுவிட்டுத் தன் ஊருக்கே கிளம்பினான்.

அவன் கந்தப்பனிடம் தான் அரிய சக்திகள் பெற்றிருப்பது பற்றிக் கூறவே அவனும் "பேஷ்.நீ தாராளமாக என் மகளை மணந்து கொள்ளலாம். ஏனென்றால் அவள் எதைக் கேட்டாலும் கொடுக்கும் சக்தி உன்னிடம் உள்ளதே. நீ அதை அவளுக்காக உபயோகி. நீ வேறு யாரிடமும் வேலையும் செய்ய வேண்டாம்" என்றான்.

முத்தைய்யனுக்கும் மரகதத்திற்கும் கல்யாணம் நடந்தது. அவனும் அவளிடம் "நீ என்னிடம் எதை வேண்டுமானாலும் கேள். ஒரு நொடியில் கொண்டு வந்து கொடுக்கிறேன்" என்றான். அவளோ "நீங்கள் என் கணவர். உங்கள் சொல் தான் எனக்கு வேதவாக்கு. உங்கள் இஷ்டம் தான் என் இஷ்டமும்" என்று பணிவுடன் கூறினாள்.

முத்தைய்யன் ஆச்சரியப்பட்டான். மரகதமா இப்படிப் பணிந்து போகிறாள்! அப்படியானால் தான் இனி தலை நிமிர்ந்து நடக்கலாம் என அவன் எண்ணினான். அப்போது தனக்கு யோகி அளித்த சக்தி தன் உயர்விற்குப் பயன்படாது எனக் கண்டான். உழைத்து வேலை செய்தால் பணம் சம்பாதிக்கலாம் எனப் புரிந்து கொண்டான். அன்றே கூச்சம் அவனை விட்டு விலகியது. அவன் நல்லவிதமாய் சம்பாதித்து பணக்காரனான். உழைத்து அதற்குக் கிடைக்கும் பணமே மேல் என்பதை அவன் புரிந்து கொண்டான். அதற்கு பின் அரிய சக்தியைப் பயன்படுத்தவில்லை.






**வா**னர வீரர்கள் பிரஹஸ்தனைக் கடுமையாக எதிர்த்தார்கள். இதில் பல ராட்சஸர்களும், வானரர்களும் மடிந்தனர். பிரஹஸ்தனின் நான்கு படைத் தலைவர்கள் பல வானரர்களைக் கொன்றது கண்டு வானர வீரன் துவிதீயன் ஆத்திரம் கொண்டு அவர்களைத் தாக்கி அவர்களில் நராந்தகன் என்பவனைக் கொன்றான். ஜாம்பவான் சமந்தன் என்ற படைத் தலைவனைக் கொன்றான். தாரன் கும்பஹனன் என்பவனைத் தாக்கி கொன்றான். மற்ற படைத்தலைவனும் கொல்லப் பட்டான்.

இதைக் கண்ட பிரஹஸ்தன் வானரர்களைக் கடுமையாகத் தாக்கிக் கொல்லலானான். அவனை நீலன் எதிர்த்தான். பிரஹஸ்தன் அம்புகளை எய்ய நீலன் மரத்தைப் பிடுங்கி அடிக்கப் போர் வலுத்தது. நீலன் பிரஹஸ்தனின் போர்க் குதிரைகளைக் கொன்று அவனது வில்லையும் அடித்து முறித்தான். பிரகஸ்தன் நீலனைத் தன் முஷ்டியால் தாக்கவே நீலன் அவனைத் தாக்கி அவனது தலையைச் சுக்கு நூறாக உடைத்தான். பிரஹஸ்தன் இறந்தது கண்டு ராட்சஸப் படைகள் ஓடி விட்டன.

பிரஹஸ்தன் இறந்த செய்தி இராவணனுக்குக் கிடைத்ததும் அவனது கோபம் கட்டுக்கு அடங்காமல் போயிற்று. அவன் தானே போர்க்களத்திற்குச் செல்ல நிச்சயித்து ஓர் அழகிய தேரில் அமர்ந்து

—கும்பகர்ணனை எழுப்புதல்—



சென்றான். இராவணனே போர்க் களத்திற்கு வந்தது கண்டு வானரர் கள் கத்தி ஆர்ப்பாட்டம் செய்த னர். இராவணனோடு பல வீரர் களும் வந்தனர்.

அவர்கள் யார் யார் என்பதை விபீஷணன் இராமருக்குக் கூறி னான். இராவணனின் மகன் இந்திர ஜித், மற்றொரு மகன் அகம்பனன். அதிகாயன், மகோதரன், பிராச னன், திரிசூரன், கும்பன், நிகும் பன் முதலானோர் அவர்கள்.

கம்பீரமாயும் ஒளிமயமான உடலையும் கொண்ட இராவணனை நேருக்கு நேர் இராமர் பார்த்ததும் சீதையைக் கவர்ந்து சென்றதற்காக அவனைத் தண்டித்தேயாக வேண் டும் என்ற உறுதியோடு இலட்சுமண னோடு நின்றார். இராவணனோ வானரசேனையை ஒரு கலக்கு கலக்கிவிட்டு முன்னேறலானான்.

சுக்கிரீவன் அவனைத் தடுத்து நிறுத்த முயன்றான். இராவணன் அவனை ஒரு அம்பால் அடித்து வீழ்த்தினான். அது கண்டு கவயன், கவயாட்சன், ரிஷபன், ஜோதிர் முகன், நபன் என்ற வானர வீரர் கள் அவனைக் கற்களால் தாக்கி னார்கள்.

ராவணன் அவர்களை எல்லாம் அம்புகள் எய்து அடித்து வீழ்த்தி னான். வானரர்கள் அத்தாக்குத லைச் சமாளிக்க முடியாமல் பயந்து ஓடினார்கள்.

அதைக் கண்ட இராமர் இரா வணனை எதிர்க்கச் சென்றார். அப்போது லட்சுமணன் தானே இராவணனை அடித்து வீழ்த்துவ தாகக் கூறவே இராமரும் அவனை எச்சரிக்கையுடன் போர் புரியு மாறு கூறி அனுப்பினார். இலட்சு மணன் செல்வதைக் கண்ட அனு மார் அவனுக்கும் முன்போய் இரா வணனின் முன் நின்று "இராவணா! நீ தேவர்களாலோ அசுரர்களாலோ கொல்லப்படக்கூடாது என்றுதான் வரம் பெற்றிருக்கிறாய். உனக்கு மனிதர்களாலும் என் போன்ற வானரர்களாலும்தான் முடிவு ஏற் படப் போகிறது. என் கையால் நீ இன்று மடியப் போகிறாய்" என்று கர்ஜித்தார்.



இராவணனோ "அனுமானே! நீ என்னை ஒரு குத்துக்குத்தி உலகில் இராவணனைக் குத்தியவன் என்ற பெயர் பெற்றுக்கொள். ஆனால் அந்த ஒரு குத்திற்குப் பிறகு இன்னொரு குத்து குத்த நீ உயிருடன் இருக்கமாட்டாய். அதைத் தெரிந்து கொள்" என்றான்.

அது கேட்டு அனுமார் சிரித்து "ஓஹோ! உன் மகன் அட்சய குமாரனைக் கொன்றவன் நான் என்பதனை நீ நினைவில் வைத்துக் கொள். அதை நினைத்தால் நீ என்னைத் தாக்க மாட்டாய்" என்றார். அது கேட்டுக் கோபமடைந்த இராவணன் அனுமாரின் மார்பில் ஓங்கிக் குத்தினான். அதனால் சற்று கலங்காமல் அனுமார் இராவணனின் மார்பில் குத்தினார். அந்தக் குத்து இராவணனை நிலைகுலையச் செய்தது. இராவணன் திக்குமுக்காடியது கண்டு வானரர்கள் மகிழ்ச்சி ஆரவாரம் செய்தார்கள்.

இராவணனும் அனுமாரைப் பார்த்து "ஆ! உனக்கு இவ்வளவு பலமா?" என்று ஆச்சரியத்தோடு கேட்டான். அனுமாரும் "இராவணா! இந்த ஒரு குத்திலேயே மலைத்துப் போய்விட்டாயே. நான் இன்னொரு குத்துவிட்டால் நீ எங்கே போவாய் தெரியுமா?" என்று கேட்டார்.

அதைக் கேட்ட இராவணன் ஆத்திரம் அடைந்து மறுபடியும் அனுமாரின் மார்பில் ஒரு குத்து விட்டான். அந்த அடியால் அனுமார் சற்றுத் துள்ளிக் குதித்தார். அப்போது இராவணன் முன்னேறி நீலனைத் தாக்கச் சென்றுவிட்டான்.

வானரப்படைத் தலைவனான நீலனை இராவணன் அம்புகளால் தாக்கலானான். நீலன் கோபம் கொண்டு ஒரு பாறையை எடுத்து இராவணன் மீது விட்டெறிந்தான். இராவணனோ தன் அம்பினால் அந்தப் பாறையைத் தூள்தூளாக உடைத்து போகும்படிச் செய்தான். பிறகு நீலனை அவன் ஒரு அம்பால் அடித்து நினைவு இழந்து விழச் செய்தான். அதன்பிறகு அவன் இலட்சுமணனோடு போர் புரியச் சென்றான்.



இலட்சுமணன் "ஓ! இந்த வானரர்களுடன் போர்புரிந்து அலுத்துவிட்டாயா? என்னோடுதானே போர் புரிய வருகிறாய். வா. வா" என்று அழைத்தான். இராவணனும் "என்னை நீ வரவேற்பது உன் மரணத்தை நீயே அழைப்பது போலத்தான். அதைத் தெரிந்து கொள். இலட்சுமணா!" என்றான்.

இலட்சுமணனும் "அடே அற்பனே! தற்பெருமை கொள்ளாதே. உன் பலமும் பராக்கிரமும் என்ன என்பது எனக்குத் தெரியும். காட்டு உன் பராக்கிரமத்தை" என்றான். அது கேட்டு இராவணன் இலட்சுமணன் மீது அம்புகளைப் பொழிந்தான். ஆனால் இலட்சுமணன் அவற்றை எல்லாம் தடுத்து நிறுத்தினான். இருவரும் கடும் போர் புரிந்தனர். அதில் இலட்சுமணன் தன் நினைவை இழந்து விழுந்தான்.

இராவணன் அவனைத் தூக்கப் போகையில் அனுமார் அவன் முன் குதித்து அவன் மார்பில் ஒரு குத்து விட்டார். அந்த அடிதாங்கமுடியாமல் இராவணன் குப்புற விழுந்து இரத்தம் கக்கினான். அப்போது அனுமார் இலட்சுமணனைத் தூக்கிக் கொண்டு இராமரிடம் சென்றார்.

இலட்சுமணன் அடிபட்டு நினைவிழந்திருப்பது கண்டு இராமர் துடிதுடித்துப் போனார். உன்னை இந்த நிலையில் பார்க்க நான் பெரும் முயற்சி செய்து இவ்வளவு தூரம் வந்தேன்? நீ இல்லாமல் நான் இருக்க முடியுமா? உனக்கு ஏதாவது விபரீதமாக நேர்ந்துவிட்டால் அதை என்னால் தாங்கிக் கொள்ள முடியாது" என்று புலம்பினார்.

அப்போது அனுமாரும் விபீஷணனும் இராமரைத் தேற்றி "இலட்சுமணனுக்கு எவ்வித ஆபத்தும் இல்லை. இது சாதாரண மயக்கம் தான். இன்னும் சத்து நேரத்தில் தன் நினைவை இலட்சுமணன் அடைந்துவிடுவான்" என்று கூறினார்கள். இராமரும் அவர்கள் கூறியபடி நடக்க வேண்டுமே என்று கவலைப்பட்டு இலட்சுமணனின் முகத்தையே பார்க்கலானார். அவரது துயரத்தைப்

போக்குவதுபோல இலட்சுமண னும் மயக்கம் தெளிந்து கண் களைத் திறந்து இராமரைப் பார்த்தான். அப்போதுதான் இரா மரும் கவலை நீங்கியவராய் புன் னகை புரிந்தார்.

சற்று நேரத்தில் இலட்சுமணன் தன் நினைவை அடைந்தான். இரா வணனும் மயக்கம் தெரிந்து எழுந் தான். அவன் மீண்டும் போருக்குத் தயாரானான். அப்போது அவனை எதிர்க்க இராமர் வந்தார். அப் போது அனுமார் இராமரிடம் "நீங் கள் என் தோளின் மீது அமர்ந்து இராவணனுடன் போர் புரியுங் கள்" என்றார்.



இராமரும் அதற்கு இணங்கி அனுமாரின் தோளில் அமர்ந்து கொண்டார். இப்போது அவர் தேரில் அமர்ந்திருந்த இராவணனுக் குச் சமமான உயரத்தில் இருந்தார். இராவணன் கூரிய அம்புகளை முதலில் அனுமார் மீது எய்தான். அதைக் கண்டு இராமருக்குக் கடும் கோபம் வந்தது. அவர் தன் அம்பு களால் இராவணனின் தேரோட்டி யையும், குதிரைகளையும், குடை யையும், கொடியையும் நாசப்படுத் தினார். ரதத்தின் சக்கரங்களை முறித்தார். பிறகு அவர் எய்த அம்பு இராவணனின் மார்பில் குத்தியது. இராவணன் தட்டுத் தடுமாறி விழ அவனது வில் எங்கோ போய் விழுந்தது.

இராமர் மற்றொரு அம்பால் இராவணன் அணிந்திருந்த கிரீடத் தைத் தூரப்போய் விழும்படிச் செய்தார். மெதுவாக எழுந்த இரா வணனைப் பார்த்து "நீ இப்போது ஆயுதம் எதுவும் இல்லாது இருக் கிறாய். அதனால் இன்று போய் நாளை வா" என்றார். அதைக் கேட்ட இராவணன் வெட்கத்தால் தலை குனிந்து கொண்டான். என்ன செய்வான்? மறுமொழி கூறாமல் இலங்காபுரிக்குள் சென்றான்.

இராமரும் இலட்சுமணனும் போரில் காயமடைந்த வானரர் களைக் கண்டு அவர்களுக்கு ஆறு தல் கூறி அவர்களது காயங்களுக்கு சிகிச்சை செய்ய ஏற்பாடுகளைக் கவனித்தார்கள். வெட்கப்பட்டு



மனதில் பட்ட காயத்தோடு சென்ற இராவணன் "இந்திரனையே வென்ற நான் இன்று ஒரு சாதாரண மானிடனிடம் தோற்றுப் போனேனே. தான் தவ வலிமை எல்லாம் என்ன ஆயிற்று? அது வீண்தானா? ஆம் நான் பிரம்மாவிடம் கேட்ட வரங்களில் எனக்கு மனிதனால் சாவு வரக்கூடாது எனக் கேட்கவில்லை. நான் தேவர்களையும் அசுரர்களையும் வெல்லும் சக்திக் கிடைத்துவிட்டால் மனிதனை வெல்வது எம்மாத்திரம் என்று அலட்சியமாக இருந்துவிட்டேன். பரவாயில்லை. இனி எச்சரிக்கையுடன் இருக்கிறேன். எனக்கு அந்த சக்தி இல்லாது போனாலும் என் தம்பி கும்பகர்ணனால் மனிதனை வெல்ல முடியுமே. அவனை எழுப்பி வரச் சொல்கிறேன்" என நினைத்து தன் ஆட்களைக் கும்பகர்ணனின் மாளிகைக்கு அனுப்பினான்.

கும்பகர்ணன் போர் ஆரம்பிப்பதற்கு ஒரு வாரத்திற்கு முன்னே தூங்கப் போய்விட்டான். அவனது மாளிகைக்கு இராவணனின் ஆட்கள் விரைந்து சென்றார்கள். கும்பகர்ணனை எழுப்பப் பல முன்னேற்பாடுகளைச் செய்தாக வேண்டி இருந்தது. அவனது உடலில் பூசச் சந்தனமும், அணிவிக்க மலர்மாலைகளுடன் உண்ணப் பலவித உணவுப் பொருள்களும் அருந்த மதுவும் அவர்கள் தம் கூட எடுத்துச் சென்றார்கள். ஆனால் அந்த மாளிகைக்குள் அவர்கள் நுழைவதே மிகச் சிரமமாக இருந்தது. ஏனெனில் கும்பகர்ணன் விடும் மூச்சும் குறட்டை வேகமும் அவர்களைத் திணற அடித்தது!

மலைபோல மாளிகைக்குள் கும்பகர்ணன் படுத்திருந்தான். ஆழ்ந்த தூக்கத்தில் இருந்த அவனை எழுப்புவது மிகவும் சிரமமே. எப்படியாவது அவனை எழுப்புவது என இராவணனின் ஆட்கள் நினைத்து அவனுக்கு எதிரே உண்ண மாமிச உணவை மலை போல குவித்து வைத்தார்கள். மதுவையும் நிறைய வைத்தார்கள். அதன் பிறகு அவர்கள் கோல்களை எடுத்துக்கொண்டு அவனது உடலில் குத்தினார்கள்.

சங்குகளை பலமாக ஊதினார்கள். டமாரங்களை பலமாகத் தட்டினார்கள். எல்லோருமாகச் சேர்ந்து அவனை உருட்டினார்கள். அப்போதும் கும்பகர்ணன் எழவில்லை.

அந்த ஆட்கள் கதைகளையும், கடப்பாரைகளையும், உலக்கைகளையும் எடுத்துவந்து கும்பகர்ணனைத் தாக்கிப் பார்த்தார்கள். அதனால் பயனில்லாது போகவே அவர்கள் அவனது உடலின்மீது குதிரையும் ஏவினார்கள். இதனால் பலன் ஏற்பட்டது. கும்பகர்ணன் விழித்து எழுந்தான்.

எழுந்ததும் அவன் தன்முன் வைக்கப்பட்டிருந்த உணவை உண்டு மதுவை அருந்தினான். பிறகு அவன் சுற்றிலும் பார்த்தான். பிறகு அவன் "என்னை ஏன் எழுப்பினீர்கள்? ஏதாவது விபரீதமாக நடந்து விட்டதா?" என்று கேட்டான்.

அப்போது இராவணனின் ஒரு மந்திரியான யூபாட்சண் கும்பகர்ணனிடம் "இதுவரை நமக்கு வராத ஆபத்து வந்திருக்கிறது. இராவணன் சீதையைக் கவர்ந்து வந்ததால் அவளை மீட்க இராமன் வானரப் படையோடு இலங்கையை முற்றுகை இட்டிருக்கிறான். ஒரு குரங்கு இராவணனின் மகன் அட்சய குமாரனைப் போரில் கொன்றுவிட்டது. இன்றோ இராமன் இராவணனையே ஆயுதங்களை இழக்கச் செய்து போர்க்களத்திலிருந்து திருப்பி அனுப்பி இருக்கிறான்" என்றான்.

அது கேட்டுக்கொதித்தெழுந்த கும்பகர்ணன் "என் அண்ணனையா ஒரு மானிடன் போர்க்களத்தில் நிராயுதபாணியாக்கித் திருப்பி அனுப்பித்தான்? நானே போய் அவனையும் அந்த வானரப் படை முழுவதையும் ஒழித்து விடுகிறேன். அதற்கு முன் நான் இராவணனைக் கண்டுவிட்டுப் போர்க்களம் செல்கிறேன்" எனக் கூறிக் கிளம்பினான்.






ஒரு ஊரில் மணி என்ற பையன் இருந்தான். அவன் மகாமக்கு. எதுவும் சரியாகப் புரியாது. கடைக்குப் போய் சாமான் வாங்க ஒரு ரூபாய் கொடுத்தால் கடைக்காரன் கொடுக்கும் மீதிச் சில்லரை எவ்வளவு என்று எண்ணக்கூடத் தெரியாது. இதை அறிந்த அவ்வூர்க் கடைக்காரர்கள் அவனை நன்றாக ஏமாற்றி வந்தார்கள்.

மணி தன் தந்தையை இழந்துவிட்டவன். அவனது தாய்தான் அவனை வளர்த்து வந்தாள். தன் மகனுக்கு எதுவும் தெரியாது என்பதால் அவள் பல வீடுகளில் வேலை செய்து அவனுக்கு வேளாவேளைக்கு சாப்பாடு போட்டு வந்தாள். மணியும் தான் மக்கு என்பதைத் தெரிந்து கொண்டு வேதனைப் பட்டுக் கொண்டுதான் இருந்தான்.

அவன் தன் தாயாரிடம் "எனக்கு மாத்திரம் கொஞ்சம் மூளை இருந்தால் நீ இப்படிக் கஷ்டப்பட வேண்டாமே" என்னும் போதெல்லாம் அவனது தாய் "உலகில் எல்லோருக்குமே மூளை இருக்கிறதா? உனக்கு மூளை இல்லாவிட்டாலும் நல்ல குணம் இருக்கிறதே. இதையாவது பகவான் உனக்குக் கொடுத்தாரே என்று சந்தோஷப்படுகிறேன்" என்பாள்.

அதனால் அவன் திருப்தி அடையாமல் "நான் மூளையுள்ளவனாய், அறிவாளியாய் ஆவதற்கு என்ன வழி?" என்று தன் தாயிடம் கேட்டு நச்சரிக்கலானான். ஒரு நாள் அவனது தாயும் "நம் ஊர் மலை மேல் மந்திரக்கிழவி மல்லம்மா இருக்கிறாள். அவளிடம் கேட்டால் உனக்கு மூளை கொடுப்பாள்" என்றாள்.

இதைக் கேட்டதும் மக்கு மணி

—ரேணுகா ரவி—



உடனே மந்திரக் கிழவியுள்ள மலைக்கு ஓடினான். அப்போது மல்லம்மா அடுப்பருகே உட்கார்ந்து சமைத்துக் கொண்டிருந்தாள். மக்கு மணி அவளிடம் "எனக்குக் கொஞ்சம் மூளை வரும்படிச் செய்வாயா? எனக்கும் எல்லோரையும் போல நல்லறிவு இருக்கவேண்டும்" என்று கேட்டான்.

மல்லம்மாவும் அவனை ஒரு முறை ஏற இறங்கப் பார்த்துவிட்டு "சரி. உனக்கு மிகவும் பிரியமாக உள்ளதைக் கொண்டு வா. அதற்குப் பிறகு பார்க்கலாம்" என்றாள். மக்குமணியும் அப்படியே செய்வதாகக் கூறி தன் வீட்டிற்கு வந்தான். அவன் தாயாரிடம் "அம்மா எனக்கு மிகவும் பிடித்தமானது எது? மல்லம்மா அதைக் கொண்டு வரச் சொன்னாள்" என்றான்.

மணியின் தாயாரும் "உனக்கு மிகவும் பிடித்தது கோழிக்கறி. அதனால் நீ ஒரு கோழியைக் கொண்டு போ" என்றாள். மக்கு மணியும் ஒரு கோழியை எடுத்துக் கொண்டு மல்லம்மா இருக்கும் இடத்திற்குச் சென்றான். மல்லம்மாவும் அதைப் பார்த்து விட்டு "உனக்கு இது தான் மிகவும் இஷ்டமானதா என்று பரீட்சித்துப் பார்க்கிறேன். காலில்லாமல் ஓடுவது எது? சொல் பார்க்கலாம்" என்று அவனிடம் கேட்டாள்.

மக்குமணிக்கு அதற்கு பதில் தெரியவில்லை. அப்போது மல்லம்மா "நீ மிகவும் விரும்புவது இது இல்லை. வேறு ஏதோ. அதைக் கொண்டுவா" என்று கூறி அனுப்பி விட்டாள். அவன் வீட்டிற்கு வந்த போது தன் தாய் கட்டிலில் படுத்திருப்பதையும் அவளைச் சுற்றிப் பலர் நிற்பதையும் கண்டான். அவனது தாய் பக்கவாதம் கண்டு விழுந்து விட்டதாக அவர்கள் கூறினார்கள். அவளுக்கு எந்த சிகிச்சை அளித்தும் பயன் அளிக்கவில்லை.

மணியின் தாய் அவனைத் தன்னருகே அழைத்து "மணீ! இனி நான் பிழைக்க மாட்டேன். உனக்கு மல்லம்மா நல்லறிவு கொடுத்து விட்டாள் அல்லவா? இனியாவது

புத்திசாலித்தனமாக வாழ்வாய் என்று நம்பிக்கையுடன் உயிர் விடுகிறேன்" எனக்கூறிக் கண்மூடி விட்டாள்.

அன்றிரவு முழுவதும் மணி தாயின் உடலின் பக்கத்தில் உட்கார்ந்து கொண்டு கண்ணீர் உகுத்தான். அப்போதுதான் அவனுக்குத் தன் தாயை விட மிகப் பிரியமான பொருள் வேறு எதுவும் இல்லை என்று தெரிந்தது. எனவே அவளது உடலை ஒரு சாக்குப்பையில் போட்டுக் கட்டிச் சுமந்து கொண்டு மறு நாள் காலை மல்லம்மாவின் இருப்பிடத்திற்குச் சென்றான்.

மணி அவளிடம் "என் தாய் தான் எனக்கு மிகவும் பிரியமானவள்" எனவே அவளும் "இது உண்மையா என்று பரீட்சிக்கிறேன். நான் சொல்வது தங்கம் அல்ல, ஆனால் தங்கத்தை விட அதிக ஒளி கொண்டது. அது என்ன சொல்" என்று கேட்டாள். மக்கு மணிக்கு பதில் தெரியவில்லை.

அப்போது மல்லம்மா "சரி நீ போய்விட்டு மறுபடியும் வா" என்று கூறி அனுப்பினாள். மக்கு மணிதான் கொண்டு வந்த சாக்கு மூட்டையை எடுத்துக் கொண்டு கிளம்பினான்.

வழியில் அவன் களைத்துப் போனதால் மூட்டையை ஓரிடத்தில் இறக்கி வைத்துவிட்டு அதன் பக்கம் உட்கார்ந்தான். அவன் தன்



நிலையை நினைத்து கண்ணீர் வடிக்கலானான். அப்போது தங்கம் என்ற பெண் அவ்வழியே வந்தாள் அவள் மணி அழுவதைப் பார்த்து "ஏன் அழுகிறாய்" என்று கேட்டாள்.

மணியும் தன் தாய் இறந்ததையும் தனக்கு அறிவு கொடுக்க மல்லம்மா போட்ட நிபந்தனையையும் அவள் இருமுறை கேட்ட கேள்விகளையும் கூறினான். அதைக் கேட்ட தங்கம் பலமாகச் சிரித்து "கால் இல்லாமல் ஓடுவது ஆறு. தங்கம் அல்லாமல் தங்கத்தை விடப் பளபளப்பாகப் பிரகாசிப்பது சூரியன். இது உனக்குத் தெரியவில்லையா? இப்படி ஒன்றும் புரியாத நீ யாராவது ஒருவரின் மேற்பார்வையில்தான் இருக்க

வேண்டும். இனிமேல் நான்தான் உன்னை கவனித்துக் கொள்ள வேண்டும். மக்காக இருப்பவனை அவன் மனைவி சரிப்படுத்துவாள் என்று பெரியவர்கள் கூறுகிறார்கள் அதனால் நான் உன்னைக் கல்யாணம் செய்துக். கொள்ளப் போகிறேன்'' என்றாள்.

மக்கு மணியும் "ஆகா! தாராளமாகச் செய்து கொள். நான் எல்லா வேலைகளையும் செய்யக் கூடியவனே" என்றான். தங்கம் மக்கு மணியைக் கல்யாணம் செய்து கொண்டு விட்டாள். தங்கம் அவனை நன்கு கவனித்துக் கொண்டாள். அவனும் தங்கம் கூறியபடியே வேலைகளைச் செய்து வந்தான்.

மக்கு மணிக்குச் சில நாட்களுக்கு பிறகு ஒருநாள் தனக்கு மிகப் பிரியமானவள் தன் மனைவி தங்கம்தான் என்பது தெரிந்தது. எனவே அவன் தங்கத்தை அழைத்துக் கொண்டு மல்லம்மாவிடம் சென்றான். அவளிடம் அவன் "இதோ! என் மனைவி தங்கம் தான் எனக்கு மிகவும் பிரியமானவள். அவளை அழைத்து வந்திருக்கிறேன்'' என்றான்.

அப்போது மல்லம்மா "சரி இதற்கு பதில் சொல். காலே இல்லாமல் பிறந்து பிறகு முன் இரு கால்களையும் பிறகு பின் இரு கால்களையும் பெற்று நான்கு கால்களுடன் உயிர் வாழும் பிராணி எது?'' என்று கேட்டான்.

மக்கு மணி ஏதோ யோசிக்கப் போகையில் தங்கம் அவன் காதில் 'தவளை' என்று சொன்னாள். மக்கு மணியும் உரத்த குரலில் தவளை என்று பதில் சொன்னான்.

அப்போது மல்லம்மா "மணீ! நீ மக்காக இருந்தாலும் உனக்கு வாய்த்த பெண்டாட்டி புத்திசாலி. அவள் அறிவைக் கொண்டு நீ சுகமாக வாழ். அவள் தான் இனி உன் மூளை'' என்று கூறி வாழ்த்தி அவர்களை அனுப்பினாள்.





# கற்றுக்குட்டி

கோபாலன் புதிதாய் வைத்தியத் தொழிலை ஆரம்பித்தான். அப்போது முதலாவது நோயாளியாக வந்தவன் ஒரு தொத்து நோய்க்காரன் அவனுக்கு மருந்து கொடுத்து அனுப்பிவிட்டு கோபாலன் கை கால் நடுங்க வீட்டிற்குள் சென்றான். அதைக் கண்ட அவன் மனைவி ருக்மணி "ஏன் இப்படி நடுங்கிக் கொண்டு வருகிறீர்கள்?" என்று கேட்டாள்.

கோபாலனும் "இன்று ஒரு தொத்து நோய்க்காரனின் நாடி பிடித்துப் பார்த்தேன். அவனது நோய் என்னைப் பற்றிக் கொண்டு விட்டது" என்று நடுங்கியவாறே கூறினான். அதற்குப் பின் அவன் பேசவே இல்லை.

ருக்மணி பயந்து ஓடிப்போய் கோபாலனின் தாய் மாமனான மூர்த்தியை அழைத்து வந்தாள். அவர் அவ்வூரில் பிரபல வைத்தியர். கோபாலனும் அவரிடம்தான் வைத்தியம் கற்றான்.

மூர்த்தி கோபாலனின் நாடியைப் பிடித்துப் பார்த்துவிட்டு "இது ஒரு வகை இழுப்பு நோய்! வாய் நரம்பு இழுத்து பேசவிடாமல் செய்து விட்டது. இதற்கு இரு வித சிகிச்சை முறைகள் உள்ளன. ஒன்று அறுவை சிகிச்சை. மற்றது பத்திய முறை. நான் இரண்டாவதாகக் கூறிய பத்திய முறையைத் தான் பயன்படுத்தப் போகிறேன். இவனுக்குப் பாகற்காய் தவிர வேறு எதுவும் சாப்பிடக் கொடுக்காதே. பாகற்காய் கறி, பாகற்காய்க் கூட்டு, பாகற்காய் பச்சடி, பாகற்காய் கஷாயம் என்று தினமும் கொடு. ஒரு வாரத்தில் சரியாகி விடும்" என்றார். ருக்மணியும் அவ்வாறே செய்வதாகக்

—எஸ். சோபினி—



கூறினாள்.

கோபாலன் அன்று சாப்பிட உட்கார்ந்ததும் பாகற்காய்கறியை ருக்மணி பரிமாறி "இதைச் சாப் பிடுங்கள். அடுத்து பாகற்காய் கஷாயம் கொண்டு வருகிறேன்" என்றாள். அதைக் கேட்ட கோபா லன் "வாய்க்கு ருசியாக எதுவும் செய்யாமல் ஒரே பாகற்காய் மய மாக எல்லாம் கொடுக்கிறாயே. இது என்ன அநியாயம்?" என்று உரக்கக் கூவினான்.

ருக்மணி உடனே "ஆ! மாமா வின் வைத்தியம் பலன் அளித்து விட்டது" என்று மகிழ்ச்சியுடன் கூறினாள். அப்போது கோபால னுக்கு ஒரு விஷயம் புரிந்தது. அவனுக்கு பிடிக்காததை செய்யச் சொன்னால் இம்மாதிரி நரம்பு இழுப்புக்காரன் உரக்கக் கத்த முயலுவான். அப்போது வாய் நரம்பு சரியாகி விடும் என்பதே அது.

கோபாலன் தன் மனைவியிடம் "நீ இப்போதே கிருஷ்ணன் வீட் டிற்குப் போய் அவனது மனைவி யிடம் பேச்சுக் கொடுத்து அவனுக்கு எது மிகவும் பிடிக்காது என்பதைத் தெரிந்து கொண்டு வா. மாமா வின் முறையை நானும் பின்பற்று கிறேன்" என்றான்.

ருக்மணியும் "பேஷ்! உங்கள் சாமர்த்தியமே சாமர்த்தியம்" எனக் கூறிவிட்டுக் கிருஷ்ணனின் வீட்டை நோக்கிச் சென்றாள். வழியில் கோபாலனின் மாமன் மூர்த்தியை அவள் கண்டாள். மூர்த்தியும் "இப்போது எப்படி இருக்கிறான் கோபாலன்?" என்று கேட்க ருக் மணியும் வீட்டில் நடந்ததை விவ ரித்தாள்.

அதைக் கேட்ட மூர்த்தி "அவ னிடமிருந்து உண்மையை வர வழைக்கவே நான் பாகற்காய்ப் பத்தியத்தைக் கூறினேன். கிருஷ் ணனுக்கும் இந்த முறையைக் கை யாண்டால் சரிபடாதே. அவனது உடல் வாக்கிற்கு ஏற்றபடி வைத் தியம் செய்ய வேண்டும். வா, உன் வீட்டிற்குப் போகலாம்" என்று கூறினார்.

இருவரும் கோபாலனின் வீட்டை

அடைந்தனர். அப்போது மூர்த்தி கோபாலனைக் கடிந்து கொண்டு "கிருஷ்ணன் முதலில் என்னிடம் தான் சிகிச்சைக்கு வந்தான். நான்தான் அவனை உன்னிடம் போகச் சொன்னேன். அவனுக்கு நீ வைத்தியம் செய்தால் உனக்குப் பெயர் கிடைக்கும். இன்னும் பலரும் உன்னிடம் வருவார்கள்" என்றார்.

அதுகேட்டு கோபாலன் தலை குனிந்து கிருஷ்ணனின் நோய்க்கு என்ன மருந்து கொடுப்பது என்று கேட்டுத் தெரிந்து கொண்டான். மூர்த்தி போனதும் மறுபடியும் கோபாலன் நடுங்கலானான்.

அப்போது ருக்மணி "இந்த நடுக்கம் யாருக்கு மருந்து கொடுப்பதை அறிய?!" என்று கேட்டாள். கோபாலனோ "என் வியாதி முழுவதுமாக தீரவில்லை. கொஞ்ச நாட்களுக்கு ஓய்வு எடுக்கப் போகிறேன். இந்தக் கிருஷ்ணனுக்கு மாத்திரம் மருந்து கொடுக்கிறேன். நீயே கொண்டு போய்க் கொடுத்து விடு" என்றாள்.

அப்போது ருக்மணி "நான் தினமும் மாமா சொன்ன ஒரு கஷாயம் போட்டுத் தருகிறேன். தொற்று நோய்க்காரரர்களைக் கண்டு பயப்படாமல் நீங்கள் வைத்தியம் செய்யலாம்" என்றாள் சிரித்தவாறே. கோபாலன் ஆச்சரியத்தோடு "நான் அப்படி பயப்படுகிறேன் என்று உனக்கு எப்படித் தெரியும்?" என்று கேட்டான்.

ருக்மணியும் "உங்கள் மாமாதான் சொன்னார். வைத்தியத் தொழிலை ஆரம்பிக்கும் போது முதலில் இப்படித்தான் நடுக்கம் ஏற்படுமாம்" என்றாள். அப்போதுதான் அனுபவஸ்தரான தன் மாமாவிடம் வைத்திய முறை பற்றி யோசனை கேளாமல் இருந்தது தவறு எனப் புரிந்தது. அதுமுதல் அவன் தன் மாமாவின் யோசனை கேட்டு அதன்படி நடந்து சிறந்த வைத்தியர் எனப் பெயர் பெற்றான்.





# காலபைரவி

காஷ்மீர நாட்டில் ஒரு பணக்காரனுக்கு ரூபிணி என்ற மகள் இருந்தாள். அவள் அழகி. அவளது தந்தை இறந்ததும் அவளே அவரது காடுகளுக்கும், வயல்களுக்கும், வீடுகளுக்கும் பணத்திற்கும் சொந்தக்காரியானாள். இதனால் பல பெரிய இடத்து வாலிபர்கள் அவளை மணக்க முன் வந்தார்கள். அவர்களில் அமீர் சந்த் என்பவன் அவளை உண்மையிலேயே விரும்பினான். ஆனால் ரூபிணிக்கு யாரையுமே மணந்து கொள்ள விருப்பம் இல்லை. அதனால் வந்த சம்மந்தங்களை எல்லாம் நிராகரித்தாள்.

ரூபிணி நடந்தோ குதிரைமீது அமர்ந்தோ காடு மலைகளில் சுற்றி இயற்கை அழகை ரசித்து வந்தாள். இப்படித் திரிந்தவளுக்கு திடீரென மந்திர, மாயசக்திகளை அடைய வேண்டும் என்ற ஆசை ஏற்பட்டது. பேய் பிசாசுகளை வசம் செய்து கொள்ளவும் கூடுவிட்டு கூடு பாயும் வித்தையை அறியவும் வாயு வேகத்தில் செல்லவும், இஷ்டப்பட்ட உருவத்தை எடுக்கவும் அவள் விரும்பினாள். இதற்காகத் தன் உடலை வருத்தியும் பல உபாசனைகள் செய்தும் சில அரிய சக்திகளை அவள் பெற்றாள்.

இதைக் கேள்விப்பட்ட அமீர் சந்த் மிகவும் மனவேதனை அடைந்தான். ரூபிணி துஷ்ட சக்திகளுக்கு என்றாவது இரையாகி விடுவாளே என்று எண்ணிக் கலங்கினான். அவளை மந்திர சக்திகளை இழக்க வைத்துச் சாதாரணப் பெண்ணாக ஆக்கிவிட அவன் தீர்மானித்துக் கொண்டான். அதற்கு என்ன வழி என்று யோசித்துப் பார்த்தான் ரூபிணி மந்திர மாய வித்தைகளைக் கற்பதால் அதனை அழிக்கும் எதிர்

—காஷ்மீர நாட்டு பழங்கதை—

சக்தியாக அதே மந்திரமாய சக்திகளை ஏவலாம் அல்லவா? அதற்கு ஏற்றவர் யார் என அவன் விசாரிக்கலானான். அவன் அது பற்றிக் கேட்டவர்கள் எல்லாம் 'கால பைரவி என்ற மந்திரக் கிழவியையே கூறினார்கள். அதனால் கால பைரவியின் உதவியை அவன் நாடினான்.

கால பைரவி சக்தி வாய்ந்தவள் எனப் பெயர் பெற்றவள். அவள் தன் நிலத்தில் பல மூலிகைகளை பயிரிட்டு வளர்ந்து வந்தாள். அமீர் சந்த் அவளிடம் ரூபிணி பற்றி விவரமாகக் கூறினான். அவளைத் தான் மணக்க விரும்புவதால் இத்தகைய கொடிய சக்திகளை அவள் அடையக் கூடாது எனத் தான் விரும்புவதாகவும் அவளிடம் சொன்னான்.

காலபைரவியும் "ஓ! அவளை மணக்க விரும்புகிறாயா? அப்படியானால் உதவுகிறேன். நீ வரும் அமாவாசையன்று வில்லையும் அம்பையும் எடுத்துக் கொண்டு வேட்டையாட அதோ தெரியும் காட்டிற்குள் போ. நீ எந்த மிருகத்தையும் கொல்லத் தேவை இல்லை. காட்டில் வெள்ளை நிற மான் எங்கே இருக்கிறது என்று பார். அதை எவ்வித காயமும் ஏற்படாமல் பிடி. அதன் கழுத்தில் கயிறைக் கட்டி இழுத்து வந்து இரவு முழுவதும் உன் அறையில் அடைத்து



வை. அதற்குப் பின் நடக்க வேண்டியதை நான் பார்த்துக் கொள்கிறேன்" என்றாள்.

காலபைரவி அங்கிருந்து போகும் போது அவள் நொண்டிக்கொண்டே போவதை அமீர் சந்த் கவனித்தான். காலபைரவி கூறியபடி அமாவாசையன்று அமீர்சந்த் தன் வேட்டை நாய்களுடன் காட்டிற்குச் சென்றான். காட்டில் வெகுநேரம் அவன் அலைந்து திரிந்து முடிவில் வெள்ளை நிற மானைக் கண்டான். உடனே அவன் தன் வேட்டை நாய்களை அதன் மீது ஏவினான்.

மான் வேகமாக ஓடியது. வேட்டை நாய்கள் அதனைத் துரத்தின. மானோ அவற்றிற்கு அகப்படாமல் ஓடியது. ஆனால் ஒரே

ஒரு வேட்டை நாய் மட்டும் அதன் வேகத்திற்குச் சமமாக ஓடியது. அது தனது வேட்டை நாயல்ல என்று அமீர் சந்த் கண்டான். அந்த நாய் நொண்டிக்கொண்டே ஓடியதை யும் அவன் கவனித்தான்.

அவனுக்கு விஷயம் புரிந்து விட்டது. கால பைரவிதான் தனக்கு உதவ வேட்டை நாயாக மாறி வந்து அந்த மானைத் துரத்துகி றாள் என அறிந்து கொண்டான். அதற்காகக் கால பைரவிக்கு அவன் தன் மனதிற்குள்ளேயே நன்றி செலுத் தினான். மானை அந்த வேட்டை நாய் பிடித்து விடும் என்பதும் அவனுக்கு உறுதியாயிற்று.

முடிவில் அந்த வேட்டைநாய் மானின் பின்னங்காலைக் கவ்வி அதை ஓடவிடாமல் நிறுத்தியது. உடனே அமீர் சந்த் குதிரை மீது சவாரி செய்தவாறே வந்து அந்த மானின் கழுத்தில் கயிறைப் போட் டுக் கட்டினான். பிறகு அதனை இழுத்துக்கொண்டு தன் வீட்டிற் குச் சென்றான். அந்த மானைப் பிடித்துக் கொடுத்த நாய் எங்கு போயிற்று என்றே தெரியவில்லை.

அமீர்சந்த அந்த வெள்ளை மானை இரவு முழுவதும் ஒரு அறை யில் போட்டு அடைத்து வைத்தான். பிறகு அவன் படுத்து நன்கு தூங்கி னான் விடியும்போது அவன் தூக் கம் கலைத்து. அப்போது பெரிய சூறாவளியே அடித்து உலகையே தலைகீழாக மாற்றி விட்டதோ என அவன் சந்தேகப்பட்டான். ஆனால் உண்மையில் அப்படி எதுவும் நடக்கவில்லை என்று அவன் கண்டுகொண்டான். அது வரை ரூபிணியிடம் இருந்த சக்தி கள் விலகியதைத்தான் அவ்வாறு அவன் கண்டான். அறையில் அடைக்கப்பட்ட மான் ரூபிணியாக மாறி இருந்தது!

ரூபிணி அமீர்சந்தை மணந்து கொள்ள இசைந்தாள். அவர்கள் கணவன் .மனைவிகளாகி நெடுங் காலம் சுகமாக வாழ்ந்தார்கள்.



# இயற்கை விநோதங்கள்

## நூறாண்டிற்கு ஒருமுறை

பெங்களூரிலுள்ள லால்பாக் பூங்காவில் நூறு வயதுப் பனை (செஞ்சுரி பாம்) வகை மரங்கள் உள்ளன. இந்த நூற்றாண்டில் நடப்பட்ட இந்தவகை மரங்கள் இப்போது தான் முதல் முறையாகப் பூக்கத் தொடங்கி இருக்கின்றன. தாவர வல்லுனர்கள் இவ் வகை மரங்கள் நூறாண்டுகள் இருக்கும் என்றும் கூறுகிறார்கள். தென் கர்நாடகத் தில் சார்முடிப் பள்ளத்தாக்கில் இந்த வகைப் பனை மரங்கள் தமது எண்பதாவது ஆண்டிலேயே பூத்து விட்டன. மொரீஷஸ் தீவிலுள்ள பாம்பில் மோசஸ் பொடானி கல் கார்டனில் உள்ள இவ்வகை மரங்களும் இந்த ஆண்டில்தான் பூக்க ஆரம்பித்துள் ளன. இவை அறுபது ஆண்டுகளுக்கு ஒரு முறை பூக்கிறதாம்.



## ரோஜாத் தைலம்



ரோஜா என்றாலே அழகும் மென்மை யும் நினைவிற்கு வரும். நம் நாட்டு ரோஜாக் களில் நூர்ஜஹான் ரோஜா என்ற வகை சிறப்பானது. இதுவரை பல்கேரியா ரோஜாக்களிலிருந்து எடுக்கப்பட்ட ரோஜா தைலமே உலகில் சிறந்ததாகக் கருதப்பட் டது. ஆனால் இப்போது நூர்ஜஹான் வகை ரோஜாவிலிருந்து எடுக்கப்படும் தைலமே பல்கேரிய ரோஜா தைலத்தை விட மிக உயர்ந்தது என்று மத்திய மருந்து வாசனைச் செடிகள் ஆராய்ச்சிக் கழகம் கூறுகிறது. இத்தைலத்திலிருந்து தயாரிக் கும் அத்தருக்கு 'நூர்ஜஹான்' என்றே பெயரிடப்பட்டிருக்கிறது.

# போட்டோ வாக்கியப் போட்டி :: பரிசு ரூ.100

**இந்தப் போட்டியின் வெற்றி பெற்ற தலைப்புகள் 1992 செப்டம்பர் மாத இதழில் வெளியிடப்படும்**


M.C. Morabad


Devidas Kasbekar

★ தலைப்புகள் ஒரு வார்த்தையிலிருந்து நாலைந்து வார்த்தைகளுள் இருக்கலாம். இரு தலைப்புகளுக்கும் தொடர்பு இருக்க வேண்டும். ★ ஜூலை 10ந் தேதிக்குள் போட்டிக்கான தலைப்புகள் எமக்கு வந்து சேர வேண்டும்.

★ எம்மிடம் வந்து சேர்ந்த தலைப்புகளில் நாம் சிறந்ததாகக் கருதும் தலைப்புகளுக்கு ரூ. 100/- பரிசு, இது இரு தலைப்புகளுக்கும் சேர்ந்ததே. ★ தலைப்புகளை தபால் கார்டில் மட்டுமே எழுதி கீழ்க்கண்ட முகவரிக்கு அனுப்பவும்.

**'அம்புலிமாமா, போட்டோ வாக்கியப் போட்டி' சென்னை-600 026**

---

## மே மாதப் போட்டி முடிவு

முதலாவது போட்டோ: **சுருதி சேர்த்து இசை பாடுவேன்**

இரண்டாவது போட்டோ: **கை கோர்த்து விளையாடுவேன்**

பரிசு பெற்றவர்: **எஸ். ராமசுப்பிரமணியன், கோவை-14**




Printed by B.V. REDDI at Prasad Process Private Ltd., 188 N.S.K. Salai, Madras 600 026 (India) and Published by B. VISHWANATHA REDDI on behalf of CHANDAMAMA PUBLICATIONS, Chandamama Buildings, Vadapalani, Madras 600 026 (India). Controlling Editor: NAGI REDDI.


---

# ஒன்று கூடிப் பாடுவோம் கேம்ப்கோ பாடலை!

"பாலும் க்ரீமும் நிறைந்தது. தின்னத் தின்ன ருசிப்பது.

என்றும் நாங்கள் கேட்பது. அதுவே கேம்ப்கோ க்ரீமி மில்க் சாக்கலேட்".




இந்தியாவின் மிகப்பெரிய,
நவீன ஆலை அளிப்பது.
கேம்ப்கோ லிமிடெட், மங்களூர்.